அங்கமின்றி தனக்குத் துணையொருவரு மின்றி ஒருவனுகவே, உன்னுடைய கடைக் கண் பார்வையினுல் வர்ணிக்க முடியாத உன் அருளை அடைந்து, இவ்வுலகெலாம் வெற்றி பெற்று வருகிருன்.

[மன்மதனுடைய வில் பூக்களாலான தால் வில்லுக்குரிய சக்தியும், பயனுமற்றது. அவ்வில்லின் நாண்கயிறு தனிப்பட்ட வண்டுகளாகவுள்ளதால் அதை இழுக் கவோ கட்டவோ முடியாது, வண்டுகள் தொட்டால் ஓடிவிடும். அம்புகள் ஐந்தும் செலவழிந்து போனுல் பிறகு அவனிடம் அம்புகள் கிடையாது. அவ்வம்புகளும் பூக்களே. எனவே பயனற்றவை. மன் மதனுக்குத் துணையாக நிற்பவன் வஸந் தம். இதுவும் காலத்தின் ஒரு பகுதியான தால் நிலையற்றது. அவனுடைய தேர் தென்றல் காற்று. உருவமற்ற இதில் இருந்து போர் புரிவது எங்ஙனம்? இவை யல்லாமல் போர் புரியும் மன்மதனே கண் ணுக்குப் புலப்படாதவன், உடல், அங்கங் களற்றவன். இத்துணை கேடான நிலையி லுள்ள மன்மதனுக்கு மூவுலகிலுள்ளவர் களையும், ஏன் பரமசிவனையும், மாமுனிவர் களையும் மோஹமடையச் செய்து வெல்லக் கூடிய திறன் கிட்டியது அம்பிகையின் கிருபை நிறைந்த கடைக்கண் பார்வை யால்தான் என்பதிலிருந்து அம்பிகையின் கடாக்ஷ மேன்மை இச்செய்யுளால் குறிக் கப்படுகிறது.]

## 7

ஒலிக்கின்ற சலங்கைகளைக் கொண்ட ஒட்யாணம் இடுப்பை அலங்கரிக்க, இளம் யானையின் மத்தகங்கள் போன்ற மார்பகங் களைக் கொண்ட, மெல்லிய இடையைக் கொண்ட, முழுச் சந்திரனைப் போன்ற முகத்தையும் கொண்டு, நான்கு கைகளி லும் முறையே வில்லையும், அம்புகளையும், பாசத்தையும் (கயிற்றையும்) அங்குசத்தை யும் ஏந்தினவளாக, த்ரிபுராசுரனை எரித்த த்ரிபுராந்தகன் எனும் பரமசிவன் தன் னுடையவள் என்று கர்வம் அடையக் கூடிய நீ எங்கள் முன் தோன்றுவாயாக!

[இச்செய்யுளில் மணிபூர சக்ரத்தி லிருந்து எல்லாவிதமான அணிகலன் களால் அலங்கரிக்கப்பட்டு, அவ்விட மிருந்து புறப்பட்டு, ஹ்ருதய மண்டலத் திலுள்ள அனுஹத சக்ரத்துக்கு வருகையி லுள்ள அம்பிகை வர்ணிக்கப்படுகிருள். இச்செய்யுளில் சொல்லப்பட்டபடி அம் பிகையை த்யானம் செய்ய வேண்டுமென் பது கருத்து. இங்கு அம்பிகை கைகள், கால்கள் போன்ற அவயவங்களுடன் கூடிய ஸ்தூல உருவத்தில் வர்ணிக்கப்படு கிருள்.]

## 8

அமுதக் கடலின் நடுவிலிருக்கும் கற் பக மரங்களைக் கொண்ட காடுகளடர்ந்த மணித் தீவில், கதம்ப மரங்கள் சூழ்ந்த உல்லாஸத் தோட்டத்தின் மையத்தில், சிந்தாமணி இரத்தினக் கற்களாலான மாளிகையில், சிவாகாரமான கட்டிலில் பரமசிவனின் தொடையையே இருக்கை யாகக் கொண்ட அறிவானந்த வுருவாக வுள்ள உன்னை, உன்னருளால் உயர்ந்த வர்கள் சிலரே சிந்தித்து ஸேவிக்க முடியும்.

[தேவியின் வழிபாட்டு முறைகளில் ஸமய மதம் என்றும், கௌல மதம் என்றும் இரு முறைகள் உண்டு. இவற்றுள் ஸமய மதம் அல்லது ஸமயாசாரம் என்பது அம்பிகையை மனதில் தியானித்து பூஜை செய்வதாகும். கௌல மதம் என்பது ஸ்ரீசக்ரம் போன்ற யந்த்ர உருவிலோ அல்லது கை, கால் முதலிய அவயங்க ளுடன் கூடிய மூர்த்தங்களிலோ ஆவா ஹனம் செய்து, அபிஷேகம், அர்ச்சனை முதலிய வழிபாடுகளுடன் ஆராதிப்ப தாகும். இச்செய்யுளில் ஸ்ரீ சங்கரர் ஸமய மதக் கொள்கையின்படி அம்பிகையின் ரூபத்தை விளக்குகிருர். மேற்சொன்ன இருவித தேவீ வழிபாட்டு முறை களிலும் அம்பிகையை ஸ்ரீசக்ர உருவில் பூஜை செய்வது மரபு. ஸமய மதத்தில் அம்பிகையை ஹ்ருதயப் பிரதேசத்தில் ஸ்ரீசக்ர ரூபமாகத் தியானித்து, மானஸிக பூஜை செய்வது விதிக்கப்பட்டுள்ளது. கௌல மார்க்கத்திலும் ஸ்ரீ சக்ர பூஜை, வெளிப்படையான முறையில், செய்யப்படு கிறது. ஸமய மதத்தை தழுவுபவர்கள் இச்செய்யுளில் குறிப்பிட்ட படி அமுதக்கட லில் மத்தியிலுள்ள கற்பக மரங்கள் சூழ்ந்த மணித் தீவில், கதம்பவனத் தோட்டத்

தின் மத்தியிலுள்ள மணி மண்டபத்தில் ஒரு கட்டிலின் மேல் பரமசிவனின் மடியில் வீற்றிருப்பதாக அம்பிகையைத் தியானம் செய்ய வேண்டும். அக்கட்டிலின் கால்கள் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் ஆகிய தேவர்களாம். ஸதாசிவனின் மடி அக்கட்டிலின் மேல் பலகையாம். இச்செய்யுளில் கூறப்பட்டுள்ள அம்பிகையின் தியானமுறை மற்றும் பல ஸ்ரீவித்யா நூல்களிலும் கூறப்படுகிறது. இங்கு, மனிதனின் தலைப்பகுதியிலுள்ள ஆயிரம் தளங்களைக் கொண்ட தாமரையில் அம்பிகையை அழைத்து வைத்து, மனதினால் தியானித்துப் பூஜை செய்வது சொல்லப்படுவதாக ஆன்றோர் கருதுகின்றனர்.]

## 9

மூலாதாரசக்ரத்திலுள்ள பூதத்துவத்தையும், மணிபூரசக்ரத்திலுள்ள ஜலதத்வத்தையும், ஸ்வாதிஷ்டானசக்ரத்திலுள்ள அக்னிதத்வத்தையும், ஹ்ருதயப் பிரதேசத்திலுள்ள அனாஹதசக்ரத்திலிருக்கும் வாயு தத்வத்தையும், இவைகளுக்கு மேலுள்ள விசுத்திசக்ரத்திலுள்ள ஆகாசதத்வத்தையும், புருவங்களுக்கிடையேயுள்ள ஆக்ஞா சக்ரத்திலிருக்கும் மனோதத்வத்தையும்— ஆக ஆறு சக்ரங்களின் மூலம் செல்லும் ஸௌஷும்ன பாதையைப் பிளந்துகொண்டு (கடந்து) அப்பால் மேலே தலையின் மேற்பகுதியிலுள்ள ஆயிரம் இதழ்கள் கொண்ட கமலத்தில் உன் கணவனான ஸதாசிவனுடன் நீ தனிமையில் (ரஹஸ்யமாக) உல்லாசமாக விளையாடிக்கொண்டிருக்கிறாய்.

[இச்செய்யுளில் மூலாதாரம் முதல் ஆக்ஞா சக்ரம் முடியவுள்ள ஆறு சக்கரங்களின் வழியே குண்டலினீ சக்தி எனும் பராசக்தியின் ஏற்றம் சொல்லப்பட்டுள்ளது. இதை ஷட்சக்ர பேதனம் என்றும் அந்தர் யாகம் என்றும் கூறுவர். மானிட உடலில் முதுகின் நடு எலும்பின் மூலம் ஸௌஷும்ன எனும் நாடி கீழே மூலாதாரத்திலிருந்து தலையின் மத்தியிலுள்ள ஆயிரம் தளங் கொண்ட தாமரை வரை செல்கின்றது. ஸமய முறைப்படி, தேவியின் உபாஸகன் குண்டலினீ சக்தியை மூலாதாரத்திலிருந்து எழுப்பி, மணிபூர சக்ரத்தில் இருக்கச் செய்து, அங்கிருந்து படிப்படியே ஒவ்வொரு சக்ரத்திற்கும் அழைத்துச் சென்று மானஸிகமாக அங்கங்கே தக்க பூஜை செய்து, தலையின் மத்தியிலுள்ள ஸஹஸ்ர கமலத்தில் ஸதாசிவனுடன் கொண்டு சேர்பித்து, அங்கு பரமானந்த ஸ்வரூபிணியாக அம்பிகையை த்யானிப்பதையே இச்செய்யுளில் சொல்லப்பட்டுள்ளது. முன்னர் 'க்வணத் காஞ்சீதாமா' என்ற ஏழாவது பாவில் அம்பிகை மணிபூர சக்ரத்தில் தோன்றுவதுபோல் வர்ணிக்கப்பட்டது. அதற்கு மேல் குண்டலினீ சக்தியின் ஏற்றம் இங்கு தெரிவிக்கப் பட்டுள்ளது.]

## 10

ஆயிரம் தளக் கமலத்துச் சந்த்ரமண்டலத்தில் அம்பிகை வீற்றிருக்கும் போது, தன் இரு பாதங்களிலிருந்தும் மழைபோல் பொழிகின்ற அமுதத் துளிகள் ப்ரபஞ்சம் எனப்படும் அம்பாளின் உபாஸகனின் உடல் நாடிகளனைத்தையும் நனைத்து விட்டு, பின்னர் அவ்வம்பிகையான குண்டலினீ சக்தி விரைவாக அங்கிருந்து கீழிறங்கத் துவங்கி, மறுபடி முன் கூறப்பட்ட சக்ரங்களின் வழியே, தன் இருப்பிடமாகிய மூலாதார சக்ரத்தையடைந்து, அங்கு வட்டவடிவமான நாகப்பாம்பு போன்ற உருவுடன்; மூலாதார சக்ரத்திலுள்ள சிறிய த்வாரத்தில் தலையைவைத்துத் தூங்குகின்றாள்.

[இச்செய்யுளில் குண்டலினீ சக்தியின் கீழிறங்கும் விவரம் தரப்பட்டுள்ளது. இக்குண்டலினீ சக்தி தாமரைத் தண்டினிலுள்ள மிக மெல்லிய நூல்போன்ற உருவமுள்ளது என்றும், மின்னல் கொடி போன்றது என்றும் சொல்லப்படும். மற்றும் மூலாதாரசக்ரத்தின் நடுவில் மிக ஸூக்ஷ்மமான ஒரு த்வாரம் இருப்பதாகக் கூறுவர். அதில் மூன்றரை சுற்றுகள் உள்ள ஒரு சிறு பாம்பு போலவுள்ள உருவத்துடன் குண்டலினீ சக்தி தன் தலையை வைத்துத் தூங்குவதாக கூறுவர். இப்படி தூங்கும் சக்தியை எழுப்பி, மேலே ஸஹஸ்ர கமலத்திற்கு அழைத்துச் சென்று, அங்கிருந்து திரும்ப அவளுடைய இருப்பிடம் அடையச் செய்வது போன்றவைகளைத் தேவீ உபா

ஸகர்கள் ப்ராணுயாமம் (மூச்சுக் காற்றை கட்டுப்படுத்தல்), யோகம் முதலிய முறைகளால், மானஸிகமாக அறிவர் என்பது ஆன்ருேர் துணிபு. இங்கு 'ப்ரபஞ்சம்,' என்ற சொல் உபாஸகனின் உடலேயும், உலகனைத்தையும் குறிக்கும் ]

11

நான்கு சிவனுருவான சக்ரங்களும், சக்தியுருவான ஐந்து சக்ரங்களும் சேர்ந்து ஒன்பது மூலப்ரக்ருதிகளான சக்ரங்களுடன், எட்டு தளங்களும், பதினறு தளங்களும், மூன்று வட்டமான வளையங்களும், மூன்று பூபுர ரேகைகளுடனும் சேர்ந்த உருவத்துடன் கூடின உன் இருப்பிடமான ஸ்ரீசக்ரத்தின் கோணங்கள் நாற்பத்தி நான்காகும்

[இச்செய்யுளில் ஸ்ரீசக்ரத்தின் அமைப்பும், தத்வமும் கூறப்படுகின்றன. ஸ்ரீகண்டன் என்ருல் விஷத்தை கழுத்தில் தரித்துள்ள சிவனைக் குறிக்கும். சிவயுவதி என்ருல் அம்பிகை. அம்பிகையின் கோணங்கள் ஐந்தென்றும், சிவனின் கோணங்கள் நான்கென்றும், இந்த ஒன்பது சக்ரங்களும் அகில உலகுகளின் மூலகாரணங்களென்றும், ஆகவே அவைகளை நவயோனிகள் என்றும் ஆன்ருேர் குறிப்பிடுவர். இந்த ஒன்பது யோனிகளையும் மானிட உடலில் ஒன்பது முக்கிய பாகங்களாக குறிப்பிடுவர். அவைகளில் மஜ்ஜா என்ற கொழுப்பும், சுக்லம் என்ற இந்த்ரியமும், ப்ராணன் எனும் மூச்சுக் காற்றும், ஜீவன் என்ற ஆத்மா ஆகிய நான்கும் சிவாத்மகமான நான்கு தாதுக்களென்றும், த்வக் எனும் தோலும், அஸ்ருக் என்ற இரத்தமும் மாம்ஸமும், மேதஸ் எனும் புத்தியும் அஸ்தி எனும் எலும்புமாகிய ஐந்தும் சக்த்யாத்மகமான ஐந்து தாதுக்களென்றும் ஆன்ருேர் கூறுவர். இப்படி மானிட உடல் ஏற்படுவது போலவே எல்லாப் ப்ரபஞ்சமும் ஏற்பட்டதாம்.

ஸ்ரீசக்ரத்தின் பாகங்களாவன :-மத்தியிலுள்ள முக்கோணம், அதைச் சுற்றியுள்ள எட்டுக் கோணம். பிறகு இரு பத்துக் கோணங்கள், பதினன்கு கோணங்கள், எட்டுத்தளம், பதினறு தளங்கள், மூன்று வட்டவளையங்கள், நான்கு புறங்களிலும், மையத்தில் வாயிற்படிகளைக் கொண்ட, மூன்று ரேகைகளாலான சதுர வடிவமான பூபுரத்ரயம் ஆகினவையாம். இவைகளில் முன் ஐந்தும் சக்தி சக்ரங்களாகவும், பின் நான்கும் சிவ சக்ரங்களாகவும் சொல்லப்படுகின்றன, ஐந்து சக்தி சக்ரங்களும், நான்கு சிவ சக்ரங்களும் சேர்வதால் ஒன்பது சக்ரங்களைக் கொண்டதான, சிவனும் சக்தியும் சேர்ந்த உருவாக ஸ்ரீசக்ரம் வர்ணிக்கப்படுகிறது. முக்கோணத்தின் மத்தியில் பிந்து இருக்கின்றது. பொதுவாக ஸ்ரீசக்ரம் 43 கோணங்களையுடையதாகச் சொல்லப்படும். வெளியிலுள்ள பதினன்கு கோணங்களையுடைய சக்ரம் ஒன்று. இதன் உட்புறம் பத்து, பத்து கோணங்களையுடைய இரு சக்ரங்கள். மேலும் உள்ளே எட்டு கோணங்களையுடைய ஒரு சக்ரம். இதன் மத்தியில் ஒரு முக்கோணம். ஆகவே ஸ்ரீசக்ரத்தில், $14+10+10+8+1=43$ கோணங்கள் (முன்னர் உள்ள ஸ்ரீசக்ரப் படத்தைப் பார்க்கவும்). இச்செய்யுளில் ஸ்ரீஆசார்யாள் அம்பிகையின் அமைப்பாகக் கருதப்படும் ஸ்ரீசக்ரத்தின் கோணங்கள் 44 என்று கூறுகிருர். இப்படிக் கூறக் காரணம் ஸ்ரீசக்ரத்தின் மையஸ்தானமாகிய பிந்துவையும் அம்பிகையின் ஒரு சரண கோணமாக அவர் கணக்கிட்டதேயாம். பிந்து ஸ்ரீசக்ரத்தின் மிக முக்கிய பாகமென்பதை யாவரும் அறிவர். இந்த பிந்துவே சிவ சக்திகளின் ஐக்கிய ஸ்தானமாகும்.

## ஸ்ரீசக்ரத்தின் ஆவரணங்கள்

1) முதலாவது ஆவரணம் :- பூபுரத்ரயம் — வெளியே த்வாரங்கள் உள்ள மூன்று கோடுகள் — இதன் பெயர் த்ரைலோக்ய மோஹன சக்ரம் — இது இச்செய்யுளில் த்ரிரேகா : என்று குறிப்பிடப்படுகிறது.

2) இரண்டாவது ஆவரணம் :— 16 தளங்களைக் கொண்ட பெரும் வெளித் தாமரை—இதன் பெயர் ஸர்வாசா பரிபூரக சக்ரம் — இச்செய்யுளில் இது கலாச்ரம் எனக் குறிக்கப்படுகிறது,

3) மூன்ருவது ஆவரணம்:—8 தளங்களைக் கொண்ட தாமரை — இதன் பெயர் ஸர்வஸம்க்ஷோபண சக்ரம் — இச் செய்யுளில் இதன் பெயர் வஸுதளம் என்று குறிக்கப்படுகிறது.

4) நான்காவது ஆவரணம்:—14 கோணங்களைக் கொண்ட சக்ரம் — இதன் பெயர் ஸர்வஸௌபாக்யதாயக சக்ரம்.

5) ஐந்தாவது ஆவரணம்:— 10 முக்கோணங்களுடன் கூடிய வெளி தசாரம்— இதன் பெயர் ஸர்வார்த்தஸாதக சக்ரம்.

6) ஆருவது ஆவரணம்:-உள்ளிருக்கும் பத்து முக்கோணங்களைக் கொண்ட சக்ரம்—இதன் பெயர் ஸர்வரக்ஷாகர சக்ரம்.

7) ஏழாவது ஆவரணம்:- எட்டு முக்கோணங்களை உடைய சக்ரம்.—இதற்கு ஸர்வரோகஹர சக்ரம் என்று பெயர்.

8) எட்டாவது ஆவரணம்:- மையத்திலுள்ள முக்கோணம். இதற்கு ஸர்வ ஸித்திப்ரத சக்ரம் எனப் பெயர்.

9) ஒன்பதாவது ஆவரணம்:- பிந்து ஸ்தானமே ஒன்பதாவது ஆவரணமாகும். இதை ஸர்வானந்தமய சக்ரம் என்பர். இங்கு தான் ஜகன்மாதாவான பரமேச்வரியும் ஸதாசிவனும் இரண்டறக் கலந்து உலகனைத்தையும் அனுக்ரஹிப்பதாகச் சொல்லப்படும். எட்டாவது செய்யுளில் ஸுதாஸிந்து என்று குறிக்கப்படுவது இந்த பிந்துஸ்தானமே.

ஸ்ரீசக்ரத்தை மனதில் த்யானித்து ஸமய மதக்காரர்கள் அம்பிகையை வழிபடுவார்கள். கௌல மார்க்கத்தினர் உலோகத் தகடுகளிலோ, மரப்பட்டைகளிலோ, பட்டிலோ ஸ்ரீசக்ரத்தை வரைந்து வழிபடுவார்கள். ஸ்ரீசக்ரம் மூன்று விதமான உருவங்களில் அமைக்கப்படும். அவையாவன:- (1) பூப்ரஸ்தாரம், (2) மேரு ப்ரஸ்தாரம் (3) கைலாஸப்ரஸ்தாரம்.]

12

உன்னுடைய அழகைப் பார்த்து, ஆசை கொண்டு அனுபவிக்கக் கூடிய வாய்ப்பு பரமசிவன் ஒருவருக்கே கிட்டுமாகையால், தவமிருந்தும் கூட கிடைக்க மாட்டாத, அத்தகைய சிவனுடன் ஒன்றியிருக்கும் பேற்றை, தேவஸ்திரீகளும் கூட மனதினுல் அடைய விரும்புகின்றனர். இம்மட்டோ! உன் அழகிற்கு ஈடான அழகுள்ள பொருளொன்றைக் காண ப்ரம்ஹா முதலிய சிறந்த கவிகளும் எவ்வளவு முயற்சித்தும் பயனடையவில்லையே!

[இச் செய்யுளில் அம்பிகையின் அழகிற்கு ஈடும் இணையுமில்லையெனச் சொல்லப்படுகிறது. மேலும் ரம்பை, ஊர்வசி போன்ற தேவலோக மாதர்கள் கூட அம்பிகையின் அழகைக் கண்டு தங்களுடைய அழகு மிகவும் குறைந்ததும், மட்டமானது மெனக் கருதி, அம்பிகையினுல் மாத்திரமடையக் கூடிய சிவஸாயுஜ்யத்தை மனதினுலாவது அடைய முயற்சிக்கின்றனர்; எனப்படுகிறது.]

13

ஒரு மனிதன் மிகக் கிழவனுக இருப்பினும், மிக விகாரமுள்ளவனுக இருப்பினும், காமலீலைகளையே அறியாதவனுக இருப்பினும், அவன்பால் உன் கடைக்கண் பார்வை விழுந்திடுமாயில், அவனைப் பார்த்து இளம் நங்கைகள் பலர் அவன் மன்மதன் என்றே எண்ணி, புத்தி மாற்றமடைந்து, கூந்தல்கள் அவிழவும், மேலாடைகள் நழுவி விழவும், இடுப்பில் அணியப்பட்டுள்ள ஒட்டியாணம் தெறிக்கவும், இடுப்பாடைகளின் முடிச்சுக்கள் விட்டுப் போவதுமான நிலையில் அந்தக் கிழ அழகற்ற அசட்டு மனிதனைத் தொடர்ந்து ஓடுவார்கள்.

[இச் செய்யுளில் அம்பிகையின் கடாக்ஷத்தின் மேன்மை குறிக்கப்படுகிறது. யாரைப் பார்த்தால் இயற்கையான நிலையில் இளம் நங்கைகளுக்கு ஆசையென்பதே ஏற்படாதோ அத்தகைய ஒருவனை நங்கைகள் தேடிக் கொண்டு ஓடுகிருர்கள் என்பதிலிருந்து அம்பிகையின் கடைக்கண் பார்வையின் ஏற்றம் போற்றப்படுகிறது.]

14

உன்னுடைய தாமரை போன்ற இரு பாதங்களும், பூமி தத்வம், ஜலதத்வம்,

தேஜஸின் தத்வம், வாயுதத்வம், ஆகாச தத்வம், மனோதத்வம், ஆகிய தத்வங்களைக் கொண்ட மூலாதாரம், மணிபூரம், ஸ்வாதிஷ்டானம், அனுஹதம், விசுத்தி, ஆக்ஞா ஆகிய ஆறுசக்ரங்களிலிருக்கும் (முறையே 56, 52, 62, 54, 72, 64) கிரணங்களைக் காட்டிலும் மிக அதிகமான, அதிசயிக்கத்தக்க ஒளியையுடையவைகளாய், அந்த ஆறு சக்ரங்களுக்கு மேற்பட்ட பிரதேசத்தில் ஒளி வீசிக் கொண்டு விளங்குகின்றன.

[இச்செய்யுள் அம்பிகையின் பாதங்களின் காந்தியைக் கூறுகின்றது. இதில் கூறப்பட்ட ஆறு சக்ரங்களையும் மூன்று கண்டங்களாகப் பிரித்துக் கூறுவர். மூலாதாரம், ஸ்வாதிஷ்டானம் ஆகிய இரண்டும் சேர்ந்து அக்னி கண்டம் என்பர். அதன் மேல் இருக்கும் அக்னி இச்சக்ரங்களில் பிரகாசிக்கின்றான். மணிபூர, அனுஹத சக்ரங்கள் சேர்ந்து ஸூர்ய கண்டமாகும். அங்கு ஸூர்யனின் ஒளி பிரிகாசிக்கின்றது. விசுத்தி, சக்ரமும், ஆக்ஞா சக்ரமும் சேர்ந்த சந்த்ர கண்டத்தில் சந்த்ரன் ஒளி வீசுகிறான். இப்படி ஆறு சக்ரங்களிலும் வீசும் ஒளிக்கதிர்கள், இவ்வாறு சக்ரங்களுக்கும் அப்பால் மேலேவுள்ள ஸஹஸ்ர கமலத்தில் நித்யப்ரகாசமாய் விளங்கும் அம்பிகையின் பாதங்களிலிருந்து வெளிப்படும் ஒளிக்கதிர்களிலிருந்து ஒளியைப் பெறுகின்றனவாம். அம்பிகையின் பாத கமலங்கள் இருக்குமிடம் நிலா மயமான உலகு. அந்தச் சந்த்ரமண்டலத்திற்குத் தேய்பிறையே கிடையாது.

இச்செய்யுளில் 'மயூகா:' என்ற சொல்லிற்கு நாட்கள் என்று பொருள். செய்யுளில் குறிக்கப்பட்ட மயூகங்களைக் கூட்டினால் 360 வரும். இவை ஆறு ருதுக்களில் அடங்கிய ஒரு வருடத்தின் மொத்த நாட்கள். இப்படி அம்பிகையின் பாத கமலங்கள் ஒளி வீசிக் கொண்டு விளங்குமிடம் ஸஹஸ்ரார கமலத்திலுள்ள அமிழ்தக் கடல் என்று சொல்லப்படும் சந்த்ரமண்டலம் போன்ற ஸ்ரீசக்ரத்திலுள்ள பிந்துஸ்தானமேயாகும்.]

## 15

சரத்கால (ஐப்பசி, கார்த்திகை மாதங்கள்) நிலவைப்போல் வெண்மையான உருவைக் கொண்டும், பிறைச் சந்திரனுடன் கூடிய, சடையையும் மகுடத்தையும் கொண்டவளும், வரத, அபய முத்திரைகளையும், ஸ்படிகமாலை, புத்தகம் ஆகியவற்றை நான்கு கைகளிலும் கொண்டவளுமாகிய உன்னைத் தியானித்து ஒரு முறையாவது ஒருவன் வணங்குவானாகில், அவனுக்கு தேன், பால், திராக்ஷை ஆகியவற்றைக் காட்டிலும் அதிகமான இனிப்புள்ள கவித்திறனும், சொல்த்திறனும் பெருகுமென்பதில் ஐயமில்லை. [சரத் காலத்தில் மேகமில்லாத தூய நீல வானைக் காணலாம் அப்போது நிலவின் பொலிவு அதிகம். அம்பிகையை வணங்குவதால் சொல்வன்மை ஏற்படும்.]

## 16

தாமரைப் பூக்களை மலரச் செய்யும் காலைக் கதிரவனைப்போல் கவிகளின் மனத் தாமரைகளை மலரச் செய்வதும், ஸூர்யனைப்போல் சிவப்பு நிறமுடையதுமான, உன் உருவத்தைத் தியானிக்கும் நல்லோர் கலைமகளின் கருணையால் ஏற்பட்ட ச்ருங்காரரஸம் நிரம்பிய தங்களுடைய வாக்குகளால் (சொற்களால்) அவைகளைக் கேட்கும் பிற நல்லவர்களின் மனதில் மகிழ்ச்சியை உண்டுபண்ணுகின்றனர்.

[இச் செய்யுளும், முன் செய்யுளும் ஸாரஸ்வத ப்ரயோகத்தைக் கூறுவதாக ஆன்றோர் சொல்வர். இச்செய்யுளிலும் அம்பிகையைத் தியானிப்பதால் நாவன்மை ஏற்படும் என்பது குறிக்கப்படுகிறது.]

## 17

தாயே! சந்த்ரகாந்தக்கல்லைப் போல் வெண்மையான வாக்கின் தேவதைகளான, வசினீ முதலிய தேவதைகளால் சூழப்பட்டவளாக உன்னைத் தியானிக்கிறவன், மேலான கவிகளின் சொற்களையொத்த இனிப்புடையதாகவும், ஸரஸ்வதியின் முகக் கமலத்திலிருந்து வீசும் நறுமணம்போன்றதுமான நாவன்மை படைத்தவனும், மாபெரும் காப்பியங்களை இயற்றும் வல்லமையுள்ளவனாகவும் ஆகின்றான்.

[இச் செய்யுள் அம்பிகையை வசினீ முதலிய எட்டு வாக்தேவதைகளுடன் கூடியிருப்பவளாக, மாத்ருகாக்ஷரரூபிணி

யாகத் தியானம் செய்தால் மஹா கவிகளு டைய வாக்கின் இனிமையையும், வன்மை யையும் பெறலாமென்பதைக் குறிக்கின் றது. 'த்வாம்' என்ற சொல் அம்பிகை யுடைய, ஐம்பது வர்ணங்கள் (அடிப்படை எழுத்துக்கள்) அல்லது அக்ஷரங்களின் வடிவைக் குறிக்கின்றது. அம்பிகையை அஷ்டவர்காத்மக மாத்ருகாரூபிணீயான ஸ்ரீமஹாத்ரிபுரஸுந்தரியாக, வசினீ முத லிய தேவதைகளுடன், 12 யோகினீ சக்தி களுடனும் சேர்த்து ஸ்ரீசக்ரத்தில் த்யானம் செய்யவேண்டுமென்று இச் செய்யுள் குறிப்பிடுவதாகச் சிலர் கூறுவர்.]

## 18

காலைக் கதிரவனின் கிரணங்களை யொத்த உன் உடலிலிருந்து வெளிப்படும் ஒளியினால் பூமியும், ஆகாசமும் முழுதும் சிவப்பு நிறத்தில் மூழ்கியிருப்பதாக எவன் உன்னைத் தியானிக்கிறானோ அவனிடத்தில் வசப்பட்டு, பயமடைந்த மானையொத்த விழிகளையுடையவர்களாய் ஊர்வசீ முத லான பல தேவஸ்திரீகள் அடங்கிக் கிடப் பார்கள்.

[இச் செய்யுளில் அம்பிகையை இளம் ஸூர்யனைப் போன்ற அருணரூபத்தில் த்யானிக்க வேண்டுமாகச் சொல்லப்படு கிறது. மான்களின் விழிகளை மேலான பெண்மணிகளின் விழிகளுக்கு உதாரண மாகக் கூறப்பட்டுள்ளது.]

## 19

சிவனுடைய பட்டமஹிஷியே! முகத் தைப் பிந்துஸ்தானமாகவும், அதன் கீழாக வுள்ள இரு மார்பகங்களையும், அவைகளுக் கும் கீழாக முக்கோணத்தையும் தியா னித்து, அதில் உன் காமராஜ மந்த்ரத்தை எவன் தியானம் செய்கிறானோ, அவனை எல்லா ஸ்த்ரீகளும் பார்த்து மோஹமடை கின்றனர் என்பது மிகவும் அற்பமான விஷயம். அத்தகைய உபாஸகன் மூன்று உலகங்களையும் அதிசயிக்கச் செய்யவல்ல வன் எனின் ஸ்த்ரீகளின் மனம் விகார மடையும்படி செய்வது என்ன ஆச்சர்யம்?

[இச்செய்யுள் காமகலாத்யானத்தைப் பற்றியது. அம்பிகையின் ஸூக்ஷ்மதர ரூப த்யானத்தைப் பற்றியும் கூறுவதாகும்,]

## 20

எல்லா உறுப்புகளுடைய ஒளியிலிருந்து பெருகும் அமுதத்தை பொழிபவளாகவும், சந்த்ரகாந்தக் கல்லினாலான உருவத்தை யுடையவளாகவும், எவன் உன்னைத் தன் மனக்கண் முன் நிறுத்தி உபாஸிக்கிறானோ, அவன் பாம்புகளுக்குக் கருடன் போலா கிறான். அம்ருத நாடியுடன் கூடிய அவ னுடைய கண்ணின் பார்வையினால் விஷ ஜுரங்கள் கூட குணமடையும்.

[இச்செய்யுள் காருடப்ரயோகம் எனப் படும். இதில் அம்பிகையை அம்ருதேச்வரீ ரூபமாகத் தியானிக்க வேண்டுமெனக் கூறப்படுகிறது.]

## 21

ஆறு சக்ரங்களுக்கும் மேலேயுள்ள மஹாபத்மாடவீ எனும் ஆயிரம் தளக் கம லத்தில் காணப்படும், மின்னல் கொடி போன்றதும், ஸூர்ய, சந்த்ர அக்னி உரு வத்தையுடையதுமான உன்கலையை, காமக் க்ரோதம் போன்ற மலங்களும், அறி வின்மை, மாயை ஆகியனவும் நீங்கப் பெற்ற மனதையுடைய சான்றோர் பார்த் துப் பார்த்து, பேரின்பம் அடைகிறார்கள்.

[இதில் அம்பிகையின் ஸூக்ஷ்ம ரூபத் தைத் தியானம் செய்வதற்கு மஹாயோகி களால்தான் முடியுமெனக் குறிக்கப்படு கிறது. 'தடில்லேகாதன்வீம்' என்றால் மின்னல் கொடியைப்போல் மெல்லியதும் நீண்டதாகவும், ஒளி வீசுவதாகவும், ஒரு சில விநாடிகளே ப்ரகாசிப்பதாகவும் என்று விரிவுரையாளர் கூறுகின்றனர். ஆக்ஞா சக்ரத்தில் அம்பிகையை (குண்டலினீ சக் தியை) அழைத்து வந்து கற்பூர ஹாரத்தி செய்து, உபாஸகன் ஸேவிக்கும்போதே, அவள் அங்கு சிறிதும் தாமதியாமல் மின் னல்போல் தோன்றி உடன் ஸஹஸ்ரதள கமலத்தில் நுழைகிறாள். பிறகு அங்குள்ள அம்ருதக் கடல் எனும் சந்த்ரமண்டலத் தின் நடுவேயுள்ள மணித்திட்டிலிருக்கும் சிந்தாமணி மண்டபத்தில் நுழைந்து ஸதா சிவனோடு இருப்பதாக முன்னர் சொல்லப் பட்டது. அங்கு இருக்கும்போது அம்பிகை

தோன்றி மறையும் மின்னல்போல் இல்லாது எப்பொழுதும் ப்ராகாசிக்கும் மின்னல்கொடிபோல் விளங்குகின்றுள். அம்பிகையின் இந்த ஸ்திர ஸௌதாமினீ ரூபத்தை மஹாயோகிகளே சற்று நேரம் தியானிக்க முடியும் என்பர்.]

22

தாயே! உன்னை நோக்கி யாதொரு பக்தன், 'பவானி! நீ உன் அடிமையாகிய என்மீது கருணையுடன் கூடிய நின் பார்வையைச் செலுத்துவாயாக' எனச்சொல்ல ஆரம்பித்து, 'பவானி! நீ', என்ற இரு சொற்களைச் சொல்லியவுடன் அவைகளுக்கு மேலுள்ள சொற்களை சொல்வதற்கு முன்னேயே, அவன்பால் உனக்கு தயவு ஏற்பட்டு, விஷ்ணு, ப்ரம்ஹா, இந்த்ரன் ஆகிய தேவர்களால் ஸேவிக்கப்பட்ட பாதங்களைக் கொண்ட நின் ஸாயுஜ்ய பதவியான மோக்ஷத்தை அவனுக்கு அளிக்கின்ருய்.

[இப்பதிகத்தில் அம்பிகையிடம் பக்தி செலுத்தினுல் மோக்ஷமடையலாம் என்ற கருத்தைக் குறிப்பிடுகிறது. 'பவானி த்வம்' என்ற சொற்கள், 'தத் த்வம் அஸி' என்ற மஹாவாக்கியத்தின் பொருளை உணர்த்துவதாகச் சில உரையாசிரியர்களின் கருத்து. இச்செய்யுளில் விஷ்ணு, ப்ரம்ஹா, இந்த்ரன் முதலியோர் எப்பொழுதும் அம்பிகையை நமஸ்கரித்துக் கொண்டிருப்பதால், அவர்களின் மகுடங்களிலுள்ள இரத்தினக் கற்களின் ஒளி அம்பிகையின் பாதங்களில் பட்டுப்பட்டு, அப்பாதங்களுக்கு ஹாரத்தி செய்வதாக வர்ணிக்கப்பட்டுள்ளது. இச்செய்யுள் அம்பிகையுடன் ஸாயுஜ்யம்—அதாவது ஒன்றிப்போவது, அல்லது மோக்ஷத்தைக் குறிக்கின்றது.]

23

உன் உடல் முழுதும் உதயஸூர்யனின் நிறம்போன்ற சிவப்பாக இருப்பதும், நீ மூன்று விழிகளோடு இருப்பதும், நின் மார்பகங்கள் சிறிது வளைந்திருப்பதும் உன் மகுடத்தில் வளைந்த பிறைச் சந்திரனிருப்பதும், முன்னர் நீ பரமசிவனின் உடலின் இடது பகுதியை அபஹரித்துக் கொண்டதினுல் இன்னமும் அந்த அவாத் தணியாது, அவருடைய முழுவுடலையும் அபஹரித்துக் கொண்டாயோ யென்று தோன்றுகிறது.

[இச் செய்யுள் சக்தி தத்வத்தைக் காட்டிலும் வேறுன சிவதத்வமில்லை யென்ற கௌலமார்கத்தின் குறிக்கோளை வெளிப்படுத்துவதாகக் கொள்ளலாம். அம்பிகை சிவனின் இடப்பகுதியைக் கொண்டுள்ளதால் சிவனுக்கு அர்த்தநாரீச்வரர் எனப் பெயர். அம்பாளின் மகுடத்தில் ஒரு பிறைச் சந்திரன், அம்பாளுக்கு இரு மார்பகங்கள், அம்பாளுக்கு மூன்று கண்கள் ஆகியவை காணப்படுவதாலும், சிவனுடைய உடலின் இடது பாதி அம்பாளாக இருந்தால் இத்தகைய தோற்றம் அவளுக்கிருக்காதாகையாலும் அம்பிகை சிவனின் முழுவுடலையும் ஆக்ரமித்துக் கொண்டதாகச் சொல்லப்படுகிறது.]

24

ப்ரம்ஹா உலகுகளைப் படைக்கிருர். விஷ்ணு அவைகளைக் காக்கிருர். ருத்ரன் அவைகளை அழிக்கிருர். ஈச்வரன் அவர்கள் மூவரையும் தன்னுள் மறையச் செய்கிருர். பிறகு அந்த ஈச்வரன் தனக்கும் மேம்பட்ட ஸதாசிவனிடத்தில் லயித்துப் போகிருர். அந்த ஸதாசிவன் நின் புருவங்களிலிருந்து வெளிப்படும் உத்திரவுகளையொட்டி அழிந்துபோன உலகங்களை மறுபடி படைத்துக் காக்க, ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈச்வரன் ஆகியோருக்கு அருள் புரிந்து அவர்களை உண்டாக்குகிருர்.

[இப்பாவில் எல்லாவுலகுகளின் தோற்றம், வளர்ச்சி, காத்தல், அழிவு ஆகியவை அம்பிகையின் புருவங்கள் அசைவதாலேயே ஏற்படுகிறதென்றும், ப்ரம்ஹா முதலியவர்கள் ஈடுபடும் படைப்பு முதலிய தொழில்கள் அம்பிகையின் ஏவல்களே எனவும் தெளிவாக்குகிறது. படைத்தல், காத்தல், அழித்தல், மறைதல், அருட்பாலித்தல் ஆகிய ஐந்து கார்யங்களுக்கும் அம்பிகையே மூலாதாரம் என அறிய வேண்டியது. இக் கருத்தைக் கொண்டே ஸ்ரீலலிதாம்பிகையின் 1000 பெயர்களைக்

கொண்ட அர்ச்சனைக் கோவையில் அம் பாளை 'பஞ்சக்ருத்யபராயணு' என்று போற் றப்படுகிறது.]

25

சிவனின் மனைவியே! உன் ஸத்வ, ரஜஸ், தமோகுணங்களிலிருந்து தோன் றியவர்களான ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் ஆகியோர், உன் பாதங்களைத் தாங்கி நிற் கும் பீடத்தினருகே, சிரம்மீது கரம்குவித்து எப்பொழுதும் நின்று கொண்டிருக்கின்ற னர். எனவே உன் பாதங்களைப் பூஜிப்ப தாலேயே அம்மூவரையும் பூஜித்ததாகும்.

[இதில் அம்பிகையைப் பூஜிப்பதால் எல்லா தேவர்களையும் பூஜித்த பயன் கிட்டு மென சொல்லப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட தெய்வத்தைப் பூஜிப்பதால் அந்த தெய் வத்தின் அருளைப் பெறலாம். ஆனுல், அம்பாளைப் பூஜிப்பதால் எல்லாத் தேவர் களின் அருளைப் பெறலாம்.]

26

மாபதிவ்ரதையான தாயே! மஹாப்ர ளயம் (உலகின் பேரழிவு) ஏற்படும்போது, ப்ரம்ஹா, விஷ்ணு, யமன், குபேரன், இந்த்ரன் முதலிய எல்லாத் தேவர்களும் மறைந்து விடுவர்; ஆனுல், உன் புருஷனை ஸதாசிவன் மட்டும் உன்னுடன் மகிழ்ச்சி யுடன் அப்போது குலாவிக்கொண்டிருப் பார்.

[இச் செய்யுளில் ஸதாசிவதத்வத்தின் உயர்வும், சக்திதத்வத்தின் ஏற்றமும் சொல்லப்படுகிறது. முன்னர் 24வது செய் யுளில் சொல்லப்பட்ட தத்வமே இங்கு விவரிக்கப்படுகிறது. மேலும் மஹாப்ரளய காலத்தில் எல்லாத் தேவர்களும் அழிந்து போகுங்கால் ஸதாசிவன் மாத்திரம் எஞ்சி நிற்கக் காரணம் அம்பிகையின் சக்தியே என்றும் சுட்டிக் காட்டப்படுகிறது.]

27

அடியேன் உளருவதெல்லாம், (பேசுவ தெல்லாம்) நின் மந்த்ரஜபமாகவும், நான் கைகள் கொண்டு செய்யும் வேலைகள் யாவும் உன்னுடைய பூஜையாகவும், உனக்கு முத்ரைகள் காட்டுவதாகவும், நான் நடப்பதெல்லாம் உன்னைச் சுற்றி வருவதாகவும், நான் உண்ணுவதெல்லாம் உன்னைக் குறித்துச் செய்யப்படும் ஹோமத் தில் அர்ப்பணிக்கும் பொருளாகவும், நான் படுப்பது உன்னை வணங்குவதாக வும், மற்றும் நான் மெய், வாய், மனம் முதலியவற்ருல் செய்யும் எல்லாக் கருமங் களும் நின் வழிபாடாகவும் இருக்கட்டும்.

[ஒருவன் செய்யும் இயற்கையான செயல்களைக்கூட அம்பிகைக்கு அர்ப்பணம் செய்வதாக நினைத்து செய்யுமின், அது வும் பயன் தருமென இச்செய்யுளிலிருந்து ஊஹிக்கலாம். இதில் ஞானயோக முறை யில் முற்றும் துறந்த ஞானிகள் அம்பி கையை உபாஸனை செய்யும் வழியைக் குறிப்பதாகச் சிலர் எண்ணுகின்றனர்.]

28

தாயே! கிழத்தன்மையையும், சாவை யும் தவிர்க்கும் திறமை கொண்ட அம்ருதத் தை உண்ட ப்ரம்ஹா, இந்த்ரன் முதலிய எல்லாத் தேவர்களுக்கும் அழிவு உண்டு. மிகக் கொடிய ஆலகால விஷத்தைக் குடித்த உன் புருஷன் மரணமடையாது இருப்பது உன் இரு தாடங்கங்களின் (காதணிகளின்) மஹிமையாலன்ரே!

[இப்பதிகம் அம்பிகையின் காதணி களின் மேன்மையைக் குறிக்கின்றது. அம்ருதமுண்ட எல்லாத் தேவர்களும் மஹாப்ரளய காலத்தில் மறைந்து விடுகி ருர்கள். ஆனுல் அம்பிகையின் பதியான ஸதாசிவன் விஷத்தையுண்ட போதிலும் எப்பொழுதும் ப்ரகாசித்துக் கொண்டிருக் கிருர். திருப்பாற்கடலைக் கடைந்தபோது வெளிப்பட்ட ஆலகால விஷத்தைப் பரம சிவன் பருகவே, அருகிலிருந்த தேவீ அந்த நஞ்சு நெஞ்சிற்குக் கீழே செல்லாது, தன் கைகளால் அவருடைய கழுத்தை இறுகப் பிடிக்கவே, அவ்விஷம் சிவனுர் கழுத்திலேயே தங்கி, அப்பகுதியை நீல மாக்கியதும், அதனுல் அவருக்கு 'நீலகண் டன்' எனப் பெயர் வந்ததும் யாவரும் அறிந்ததே. இப்படி விஷமுண்டும் மரணத்தினின்று பரமசிவன் தப்பித்த

தற்குக் காரணமே அம்பிகையின் காதணி களின் மஹிமையென்று இங்கு குறிக்கப் படுகிறது. தாடங்கங்கள் கணவன் உயிரு டனுள்ள பெண்மணிகளால் காதுகளில் அணியப்படும் அணிகலன்களாகும். ஸூர் யனும், சந்த்ரனும் காலத்தைக் குறிக்கும் தேவர்கள். காலத்தைக் கடந்து நிற்கும் அம்பிகையின் காதணிகள் ஸூர்ய சந்த்ரர் களே என்று பல நூல்கள் கூறுகின்றன.]

## 29

உன் புருஷன் பரமசிவன் உன்னைத் தேடி உன்னுடைய மாளிகைக்கு வரும் போது, அவரை வரவேற்கத் துரிதமாக நீ எழுந்து செல்லும்போது, நின் வழியிலே உன்னை வணங்கிக் கொண்டிருக்கின்ற ப்ரம்ஹா, விஷ்ணு, இந்த்ரன் முதலிய தேவர்களின் மகுடங்கள் நின் காலில் இடருமோவென்று பயந்து, அவைகள் வழியிலிருப்பதை உனக்கு எடுத்துரைக்கும் உன்னுடைய பணிப் பெண்களின் சொற் கள் நன்கு விளங்குகின்றன.

[இந்த செய்யுளினால் அம்பிகையின் பதிபக்தியும், கணவன் பாலுள்ள அன்பும் வெளிப்படுகின்றன.]

## 30

ஆதியுமந்தமுமில்லாத் தாயே! வணங்கத் தக்கவளே! நின் உடலின் ஓர் உறுப்பான உன் பாத கமலங்களிலிருந்து தோன்றிய கிரணங்களாம் அணிமா முத லிய எட்டு ஸித்திகளால் சூழப்பட்ட உன்னை, தானே நீயென்ற ஒன்றிய உணர்ச்சியுடன் எவன் எஞ்ஞான்றும் தியானிக்கிறானோ, அவனுக்கு பரமசிவனின் செல்வமெலாம் புல்லுக்குச் சமமாம். அத் தகைய ஓர் உபாஸகனுக்கு மஹாப்ரளய காலத்திலெழும் பெருந்தீ ஹாரத்தியெடுக் குமென்றால் விந்தையல்ல.

[இதில் அம்பிகையையும், தன்னையும் ஒன்றாகப் பாவிக்கும் ஐக்கிய பாவனை சொல்லப்படுகிறது. அம்பாளுடைய பாதங்களிலிருந்து உண்டாகும் ஒளிக் கதிர்களே அணிமா முதலிய எட்டு ஸித்தி களாம். அவை—அணிமா, மஹிமா, கரி மா, லகிமா, ப்ராப்தி, ப்ராகம்யம், ஈசத்வம், வசித்வம்.]

## 31

பலவாறான ஸித்திகளுக்குத் தக்கவாறு 64 தந்த்ரங்களை (ஜப பூஜா வழிகளை) பரம சிவன் உலக மக்களின் நன்மைக்காக முத லில் வெளியிட்டார். இப்படிச் செய்த பின்னர் அவர் தான் செய்ய வேண்டிய கார்யங்களைச் செய்து முடித்து விட்டதாக இருக்கையில் உன் நிர்ப்பந்தத்தால் மறு படி மனிதக் குறிக்கோள்கள் யாவற்றை யும் ஒரு சேரக் கொடுக்கக் கூடிய நின் இத்தந்த்ரத்தை இவ்வுலக மக்கள் உய்யும் பொருட்டு அருளினார்.

[இச் செய்யுள் பராசக்தியின் உபா ஸனை பிற எல்லா தந்த்ரங்களைக் காட்டி லும் பக்தர்கள் விரும்பும் தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் போன்ற எல்லா விருப் பங்களையும் தரவல்லது என்பதையும், அம்பிகையின் தந்த்ரத்தையும் பிற தந்த் ரங்களையும் வெளியிட்டவர் பரமசிவன் என்பதையும் தெரிவிக்கிறது. எல்லாவித மான மந்த்ரம், சாஸ்த்ரம் ஆகிய கல்வி முறைகள் யாவற்றிற்கும் பரமசிவனே மூல காரணமென்ற, ஈசான: ஸர்வ வித்யா ணும் என்ற வேதவாக்கியம்) இங்கு சுட்டிக் காட்டப்படுகிறது. 'இதம் தே தந்த்ரம்' என்று இச் செய்யுள் குறிப்பது 16 அக்ஷ ரங்களைக் கொண்ட (16 எழுத்துக்களை யுடைய ஷோடசாக்ஷரீ) ஸ்ரீவித்யை என் றும், அதிலும் ஸமய மதத்தைச் சொல்கிற தென்றும் விரிவுரையாளர்கள் பலவாறாகக் கூறுவர்.]

## 32

சிவ, சக்தி, காம, பூமி, பீஜாக்ஷரங்கள் ஒரு பகுதி, ரவி, சந்த்ர, ஸ்மர, ஹம்ஸ பீஜாக்ஷரங்கள் ஒரு பகுதி. கடைசியாக பரா, மார, ஹரி பீஜங்கள் ஒரு பகுதி. இந்த ஒவ்வொரு பகுதியின் முடிவிலும் 'ஹ்ரீம்' என்ற பீஜாக்ஷரமும் சேர்ந்து நின் மந்த்ரத்தின் அங்கங்களாகும்.

[ஸ்ரீவித்யா மந்த்ரங்கள் ஷோடசாக்ஷரீ பஞ்சதசாக்ஷரீ, நவாக்ஷரீ, மஹாமோஹினீ

போன்ற பலவிதங்களாக உள்ளன. இவற்றுள் இங்கு பஞ்சதசாக்ஷரீ குறிக்கப் படுகிறது. இந்த பஞ்சதசாக்ஷரீ மந்த்ர மும் இரு முறைகளில் காணப்படுகிறது. இங்கு 'காதி வித்யை' என்ற வழி சொல்லப் பட்டுள்ளது. ஒவ்வொரு அக்ஷரமும் அந் தந்த தேவதையின் பெயரால் செய்யுளில் குறிக்கப்பட்டுள்ளது. கீழே தேவதை-களுக்குரிய அக்ஷரங்கள் கொடுக்கப்பட் டுள்ளன.

சிவ := க, சக்தி := ஏ, காம := ஈ, க்ஷிதி :=ல, ரவி :=ஹ, சீதகிரண : (சந்த் ரன்)= ஸ, ஸ்மர := க, ஹம்ஸ := ஹ, சக்ர : =ல, பரா—ஸ, மார—க, ஹரி—ல. 'ஹ்ருல் லேகாபி:' என்றுல் மேலே சொல்லப் பட்ட ஓவ்வொரு பிரிவின் முடிவிலும் வைக் கப்படும், 'ஹ்ரீம்'. இந்த 'ஹ்ரீம்' பீஜா க்ஷரத்தை மாயாபீஜமென்றும், புவனேச் வரீ பீஜமென்றும், சிந்தாமணி பீஜமென் றும், லஜ்ஜா பீஜமென்றும் சொல்வர். மேற்கண்ட 12 அக்ஷரங்களில் முதல் நான் கும் அவைகளின் முடிவில் வைக்கப்படும் ஹ்ரீம்காரத்தையும் சேர்த்து வாக்பவ-கூடம் என்றும், அடுத்த ஐந்து அக்ஷரங் களும் அவைகளின் முடிவே வைக்கப்படும் ஹ்ரீம்காரத்தையும் சேர்த்து காமராஜ கூடம் என்றும், கடை மூன்று எழுத்துக் களையும் அவைகளுக்குப் பின் உச்சரிக்கப் படும் ஹ்ரீங்காரத்தையும் சேர்த்து சக்தி கூடம் என்றும் ஆன்றோர் கூறுவர். இம் மூன்று கூடங்களும் சேர்ந்தே பஞ்சதசீ என்ற மஹாமந்த்ரம். லலிதாம்பிகையின் ஆயிரம் நாமங்களில் 'மூலகூடத்ரயகளே பரா' என்று ஒன்றும் காண்கிறோம். மேற் சொன்ன மூன்று கூடங்களில் முதலாவது கூடம் அம்பிகையின் முகமாகவும், மத்திய கூடம் கழுத்து முதல் இடைவரையாகவும், மூன்றுவது கூடம் இடுப்பு முதல் பாதம் வரையுள்ள பகுதியாகவும் கணக்கிடப்படு கின்றன.]

## 33

ஆதியுமந்தமுமில்லாத் தாயே! நித் யானுபவமுள்ள பேரறிவு பெற்ற யோகி கள் சிலர், உன்னுடைய மந்த்ரத்தின் முன் றுல் ஸ்மர, யோனி, லக்ஷ்மீ, பீஜாக்ஷரங் களைச் சேர்த்து, சிந்தாமணி ஜபமாலைக ளைக் கொண்டு ஜபித்து, அமுதஸுரபியின் பாலிலிருந்து கிடைக்கும் நெய்யைக் கணக் கில்லாத முறைகள் பிந்துஸ்தானத்திலிருக் கும் சிவாக்னியில் ஹோமம் செய்து உன்னை வழிபடுகின்றனர்.

[இச் செய்யுள் ஸமயாசாரத்தைப் பின் பற்றும் சிலரின் வழிபாட்டைக் குறிக்கு மென்பர். இது அகத்திய முனிவரின் மனைவியான லோபாமுத்ரையினுல் வகுக் கப்பட்ட ஹாதி வித்யை என்றும் கூறு வர். இதில் சொல்லப்படும் ஸ்மரம் = ஹ, யோனிம் = ஸ, லக்ஷ்மீம் = க.]

## 34

தாயே! பரமசிவனுக்குப் பராசக்தியா கிய நீ சந்த்ரனையும். ஸூர்யனையும் மார் பகங்களாக் கொண்டவளாய், உடலாக இருக்கிறுய். களங்கமற்ற நவவ்யூஹாத் மகமான சம்புவின் உருவாகவே உன்னுரு வத்தை நினைக்கின்றேன். எனவே முக்ய மாக இருப்பவர், முக்யமற்றவர் என்ற, மிகுந்த மிகாத உருவான தொடர்பு, ஸமான குணங்களைக் கொண்டிருப்பதால் உண்டாகும் பேரின்பத்தில் ஈடுபட்டுள்ள உனக்கும் பரமசிவனுக்கும் பொதுவானது.

[இங்கு பூர்வ கௌல வழியைக் குறிப்ப தாகச் சொல்லப்படுகிறது. சிவன், சக்தி இவர்களில் யார் முக்யம்? யார் முக்ய மில்லை? என்று வேற்றுமை கிடையாதென் பதை இச் செய்யுள் குறிப்பிடுகின்றது. பரமசிவனும் அம்பிகையும் உருவம், நிறம், பெயர், செய்கை, இருப்பிடம் ஆகியவற் றில் ஒரே விதம். வழிப்பாட்டில் (சக்ரம் முதலியவைகளில் வழிபடும் போது) இரு வரும் ஸமம். மூன்று கண்கள் சிவப்பு நிறம், தலையில் பிறைச் சந்த்ரன் போன்ற வை இருவருக்குமுண்டு. நடனமாடுவது, படைத்தல், காத்தல், அழித்தல் இருவருக் கும் ஸமம். சிவ, சிவா; பைரவ, பைரவீ; ஸமய, ஸமயா; போன்ற பெயர்களிலும் இருவரும் ஒன்று. இருவரும் பேரானந் தத்தை அனுபவிக்கிறுர்கள். இருவரும் சேர்ந்து ஸச்சிதானந்த ரூபமாக உள்ளார் கள். இப்படி இருவரும் இரண்டறக் கலந்

திருக்கும் ஸ்வரூபத்தைத் தியானிப்பதே இச் செய்யுளின் கருத்து.]

35

ஹே சிவனின் மனைவியே ! நீயே ஆறு சக்ரங்களிலுமுள்ள மனம், ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், பூமி ஆகிய தத்வங்களாக இருக்கின்றாய். இத்தத்வங்கள் உன்னுடன் ஒன்றியமையும் போது உன்னையன்றி வேறு பொருளே கிடையாது. இவ்விதம் உன் ஸ்வரூபத்தை அண்டத்தினுடன் ஒன்றாக்கிக் கொள்ளும் எண்ணத்துடன் நீயே சித்சக்தி ரூபத்தையும் ஆனந்த பைரவரின் ரூபத்தையும் சேர்ந்து எடுத்தவளாகக் கிறாய்.

[எல்லாத் தத்வங்களையும் தன்னுள் அடக்கியவள் அம்பிகை. சிவதத்வமும்கூட இச்செய்யுளின்படி சக்திதத்வத்தில் அடங்கியதே. அம்பிகையே காரணகார்ய உருவாகப் ப்ரகாசிக்கின்றாள். இச் செய்யுள் உத்தர கௌல மதத்தின் தியான முறை யெனச் சொல்லப்படும்.]

36

கோடி ஸூர்ய சந்திரர்களின் ஒளியுடன் கூடியவராக, பரசித்ரூபிணியான உன்னைப் பக்கத்தில் கொண்ட பரமசிவனையும், உன்னையும் ஆக்ஞா சக்ரத்திலிருப்பவர்களாகத் தியானித்து, வணங்குகிறேன். அப்படிச் சிவனையும் சக்தியையும் பக்தியுடன் வழிபடுகிறவன் ஸூர்யன், சந்த்ரன், அக்னி ஆகியோர், அடையமுடியாத, கண்ணுக்கெட்டாத தனித்து நிற்கும், ஏகாந்தமான, நிலைத்த நிலவோடு கூடிய உலகில் (ஸஹஸ்ரகமலத்தில்) இருப்பான்.

[இது முதல் 41ஆவது செய்யுள் முடிய ஆறுபாக்களில் பராசக்தியும் பரமசிவனும் ஆக்ஞா, விசுத்தி, அனாஹத, ஸ்வாதிஷ்டான, மணிபூர, மூலாதார சக்ரங்களில் ப்ரகாசிக்கும் ரூபம் விளக்கிச் சொல்லப்படுகிறது. பரன் என்றால் சிவனுக்குப் பெயர். பரா என்றால் அம்பிகைக்குப் பெயர். ஸஹஸ்ரகமலம் ஸூர்யனோ, சந்த்ரனோ, நக்ஷத்ரங்களோ ஒளி வீசாத எப்பொழுதும் மிக ப்ரகாசமான நிலவோடு விளங்குமிடமென வேதமும் பகவத் கீதையும் கூட குறிப்பிடுகின்றன. இக் குறிப்புகளை யொட்டியே ஆதிசங்கரர் ஸூர்யன், சந்த்ரன், அக்னி ஆகியோரால் அடைய முடியாதது என்ற அடைமொழியை உபயோகித்துள்ளார். ஆக்ஞா சக்ரத்திற்கு மேல் இருக்கும் ஸஹஸ்ரதள கமலத்தில் விளங்கும் மற்றொரு சந்த்ரன் ஸ்ரீசக்ர வடிவாக எப்பொழுதும் பூர்ணகலைகளுடன் ஒளி வீசிக் கொண்டிருக்கிறான்.]

37

தூய ஸ்படிகமணிபோல் களங்கமற்றவராகவும், ஆகாச தத்வத்தை விளக்குபவராகவும் காணப்படும் பரமசிவனையும், அதே போன்ற உருவம், முயற்சி முதலியவைகளைக் கொண்ட உன்னையும் சேர்த்து விசுத்தி சக்ரத்திலிருப்பவர்களாகத் தியானித்து வணங்குகிறேன். உங்களிருவரிடமிருந்து வெளிப்படும் நிலவையொத்த ஒளி எல்லாவுலகங்களிலும் நிலவி நிற்கும் அறியாமையான இருட்டை விலக்குகிறது. இருள் நீங்கிய உலகெலாம் சகோரப் பறவைபோல் மகிழ்சியடைகின்றது.

[இங்கே விசுத்தி சக்ரத்தில் சிவசக்திகளின் தியானம் குறிக்கப்படுகிறது. சகோரப் பறவை நிலாவைப் பருகுமென்பதும், அதனால் மகிழ்ச்சியடையும் என்பதும் ஆன்றோர்களால் கூறப்பட்டவை. நிலவை அல்லது சந்த்ரனிடமிருந்து வெளியாகும் அமுதத் திவலைகளைப் பருகும் சகோரப் பறவை ஆனந்தமடைவது போல் தேவியை வழிபடுபவன், சிவதம்பதிகளிடமிருந்து வெளிப்படும் குறைவிலா நிலவு போன்றப் பிரகாசத்தினால் அக்ஞான இருள் விலகிப் பேரானந்தமடைகிறான் என இங்கு சொல்லப்படுகிறது.]

38

எந்த ஆணும் பெண்ணுமான இரட்டை அன்னப் பறவைகளின் சொற்கள் 18 வித்யைகளுக்கு மூல காரணமோ, எந்த இரு அன்னங்கள் சாதரணமான அன்னப்பறவைகள் நீரும் பாலும் சேர்ந்த கலவையிலிருந்து பாலைப் பிரித்துப் பருகுமோ அது போல் குறைபாடுகளைத் தள்ளி

குணங்களை ஏற்குமோ, எந்த இரு பறவைகள் ஹ்ருதயகமலத்தின் மகரந்தத்தில் மகிழ்ச்சியடைகின்றனவோ, எந்த இரண்டும் மஹான்களான யோகிகளின் மனமான ஏரியில் திரிகின்றனவோ, அத்தகைய விவரித்துக் கூற முடியாத மேன்மையோடு கூடிய கணவனும்-மனைவியுமாக உங்களிருவரையும் அனாஹத சக்ரத்தில் தியானித்து வணங்குகிறேன்.

[இப்பாவில் சிவசக்திகளின் அனாஹத சக்ரத்யானம் சொல்லப்படுகிறது. அனாஹதசக்ரத்திற்கு ஸம்வித் அல்லது ஞானரூபமான கமலம் என்று பெயர். சிவனையும் சக்தியையும் இச் செய்யுளில் ஆண் பெண் அன்னப் பறவைகளாக வர்ணிக்கப்படுகிறது. 'ஹம்ஸ:' என்ற சொல்லில் 'ஹம்' என்பது சிவனையும், 'ஸ:' என்பது அம்பாளையும் குறிக்கும். எனவே 'ஹம்ஸ' என்றால் சிவனும் சக்தியும் ஒன்றியதாம்.]

## 39

தாயே! உங்களிருவரையும் (பரமசிவனையும் பராசக்தியையும்) அக்னி தத்வ இடமாகிய ஸ்வாதிஷ்டானசக்ரத்தில் ப்ரளய காலப் பெருந்தீயாகவும், அத்தீயின் கொழுந்து விட்டெரியும் ஜவாலையின் உருவாகவும் தியானித்து, பூஜித்து, நமஸ்கரிக்கிறேன். மிகுந்த சினத்துடன் கூடிய எவருடைய பார்வை எல்லாவுலகுகளையும் தீக்கிரையாக்கும் போது அந்த அவருடைய கொடிய தீயைக் கருணை சுரக்கும் நீர்தோய்ந்த, சந்த்ரகலாவுருவான நின் பார்வை குறைத்து அவ்வுலகுகளை மறுபடி குளிரச் செய்கின்றது.

[ஸ்வாதிஷ்டான சக்ரத்தில் சிவதம்பதிகளை வழிபடுவது சொல்லப்படுகிறது. அங்கே சிவனை உலகையழிக்கும் ருத்ரனாகவும், அம்பிகையை ருத்ராக்னியின் ஜ்வாலையாகவும் சொல்லப்படுகிறது.]

## 40

மணிபூர சக்ரத்தில் பரமசிவனை மழைகாலத்து நீருண்ட மேகமெனவும், உன்னை மேகத்தின் ஊடே பிளந்து செல்லும் மின்னல் கொடியாகவும் மனதில் எண்ணி வணங்குகிறேன். ஆங்கு நிலவும் இருளை மின்னலாகிய நீ அகற்றுகிறாய். உன்னால் அணியப்பட்டுள்ள அணிகலன்களின் மிகுந்த ஒளியால் சிவனான மேகம் வானவில்லுடன் கூடியது போல் காண்கிறது. மஹாப்ரளயகாலத்தில் ருத்ரனால் எரிபட்ட உலகுகளை வர்ணிக்கமுடியாத மேன்மை பொருந்திய அக்கார்மேகம் பொழிவிக்கும் மழையினால் குளிர்ச்சியடையச் செய்கிறது.

[மணிபூரசக்ரத்தில் சிவசக்திகளின் ஆராதனம் இங்கு குறிக்கப்படுகிறது. இதில் ஸதாசிவனை மேகமாகவும் அம்பிகையை மின்னல் கொடியாகவும் தியானிக்கப் படுகிறது. மணிபூரசக்ரத்தில் அம்பாளுக்கு நவரத்னங்களாலான அணிகலன்கள் அணிவிக்கப்படுவதால் அந்த ரத்னங்களின் ஒளியே மேகத்தில் இந்திரனின் வில்லாக வர்ணிக்கப்பட்டுள்ளது.]

## 41

நாட்டிய விளையாட்டில் ஆசையுள்ள 'ஸமயா' எனும் உன்னுடன் கூட ஒன்பது சுவைகளுடன் கூடிய மாபெரும் நடனம் செய்யும் நவாத்மகனான ஸதாசிவனை மூலாதாரசக்ரத்தில் தியானித்து, வணங்குகிறேன். மஹாப்ரளயத்தினால் அழிந்து போன உலகங்களை மறுபடி படைக்க வேண்டுமென்ற கருணையுடன் நீங்களிருவரும் ப்ரகாசிப்பதால் அகில உலகும் உங்களிருவரையும் தந்தையும் தாயுமாக அடைந்தது.

[இச் செய்யுளில் அம்பிகையையும் ஸதாசிவனையும் சேர்த்து மூலாதாரசக்ரத்தில் வழிபடும் முறை குறிக்கப்பட்டுள்ளது. ஆண்களின் நடனம் தாண்டவமென்றும் பெண்களின் நடனம் லாஸ்யமென்றும் சொல்லப்படும். பரசிவமும் பராசக்தியும் நடனம் ஆரம்பிக்கும் போது அண்டங்களனைத்தும் உண்டாகின்றன என்றும், அந் நடனம் முடியுமளவில் உலகங்களனைத்தும் அழியுமெனவும் ஆன்றோர் கூறுவர். ஸாதாரணமாக ஆறு சக்ரங்கள் மூலாதாரத்திலிருந்து முறையே ஆக்ஞா சக்ரம் வரை சொல்லப்படுவது வழக்கம். ஆனால் ஸௌந்தர்யலஹரீயில்

ஸ்ரீஆசார்யாள் ஆக்ஞா சக்ரத்தில் ஆரம்பித்து மூலாதாரத்தில் முடித்திருக்கிறார்கள். இதற்குக் காரணம் அவருக்கு வேத்வாக்கியத்தின்படி இந்த ஸ்ரீவித்யா ஸ்தோத்ரத்தை அமைக்க வேண்டுமென்ற நோக்காக இருக்கலாமென்று தோன்றுகிறது. வேதம், ஆன்மாவிலிருந்து -ஆகாசமும், ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும், அக்னியிலிருந்து ஜலமும், ஜலத்திலிருந்து பூமியும் உண்டானதாக நன்று கூறுகிறது. இந்த வரிசையையொட்டியே ஸௌந்தர்யலஹரீயில் 36 முதல் 41 வரையுள்ள, ஆறு செய்யுட்களில் சிவசக்தியின் ஆராதன வரிசையும் காணப்படுகிறது. இந்தப் பாவிற்கு விரிவுரையாளர்கள் விவரமாக உரையெழுதி கௌலமதத்திற்கும், ஸமயமதத்திற்குமுள்ள வேறுபாடுகளை விவரமாக குறித்துள்ளனர். இச் செய்யுள் இருமதங்களுக்கும் பொதுவானதென்றும் அவர்கள் குறிப்பிடுகின்றனர். மேலும் இதில் அம்பிகைக்கும் ஸதாசிவனுக்கும் உள்ள ஒற்றுமைகள் குறிப்பிடப்படுகின்றன. இந்தச் செய்யுளுடன் மந்த்ர சாஸ்த்ர நுணுக்கங்கள் நிறைந்த 41 பாக்களைக் கொண்ட ஆனந்தலஹரீ எனும் ஸௌந்தர்யலஹரீயின் முதற்பகுதி முடிவடைந்ததாகச் சிலரின் கருத்து. ஆறு சக்ரங்களில் சிவதம்பதிகளைத் தியானித்து மானஸிக வழிபாடு செய்வதை இப்பகுதியின் கடைசி ஆறு பாக்களும் விளக்குகின்றன.]

## 42

பனிமலையின் புதல்வியே! பன்னிரெண்டு ஆதித்யர்கள் எனும் ஸூர்யன்களை மாணிக்கக்கற்களாகக் கொண்டு இழைக்கப்பட்ட உன்னுடைய தங்கத்தாலான மகுடத்தை யாதொருவன் வர்ணிக்கத் தொடங்கினால், அவன் அந்த மகுடத்தில் அமையப் பெற்றுள்ள பிறைச் சந்த்ரனைப் பார்த்து, அதில் முன் கூறப்பட்ட மாணிக்கக் கற்களின் ஒளி வீசி பலவித வர்ணங்களை உண்டாக்குவதால், அப்பிறைச் சந்த்ரன் பல்வேறு வர்ணங்களைக் கொண்ட வானவில்லோ (இந்த்ரனின் வில்லோ) என ஐயமடைந்து அப்படியே வர்ணித்து விடுவான்.

[இச்செய்யுள் அம்பிகையின் மகுடத்தை வர்ணிக்கிறது. பன்னிரெண்டு ஆதித்யர்கள் அக்கீரிடத்தில் பதிக்கப்பட்டுள்ள மாணிக்கக் கற்களாகச் சொல்லப்படுகிறது.]

## 43

ஹே பார்வதீ! மலர்ந்த நீலோத்பல மலர்களின் காடு போன்று, அடர்ந்து, பளபளப்புடன் மெல்லியதாகவுள்ள உன்னுடைய கூந்தல் எங்களுடைய மனதிலிருக்கும் அறியாமையெனும் இருட்டை அகற்றட்டும். அக்கூந்தலின் மீது அணியப்பட்டுள்ள இந்த்ரனின் நந்தவனத்திய மேலான மலர்கள் உன் கூந்தலின் இயற்கையான நறுமணத்தைத் தாங்களும் பெறவே அங்கே வந்து கூடியிருக்கின்றன வென நான் எண்ணுகிறேன்.

[இங்கு அம்பிகையின் கூந்தல் வர்ணிக்கப்படுகிறது. இங்கு கூறியபடி அம்பிகையைத் தியானிப்பவர்கள் மனதிலுள்ள இருள் நீங்கப் பெற்று, ஞானமடைவர். இப்படி ஸ்ரீ சங்கரர் கூறியிருப்பது போலவே பாஸ்கரராயர் லலிதா ஸஹஸ்ர நாமத்தில் வரும் 'சம்பகாசோகபுன்னக ஸௌகந்திக லஸத்கசா' என்ற அம்பிகையின் பெயருக்குப் பொருள் கூறியிருக்கிறார்.]

## 44

காரிருளில் சிறையில் அடைக்கப்பட்ட (எதிரிகளால் சூழப்பட்ட) இளங்கதிரவனின் கதிர் போன்ற குங்குமம் இடப்பட்டதும், நின் முகத்தின் வடிவழகின் வெள்ளப்பெருக்கிற்கு வடிகால் போன்றதுமான, உன் வகுடு எங்களுக்கு எல்லாவித மான நன்மைகளையும் பயக்கட்டும்.

[இதில் அம்பாளுடைய கூந்தல் நடுவேயுள்ள ஸீமந்தம் எனும் வகுட்டை ஸ்ரீ ஆசார்யாள் துதிக்கிறார்கள். பெண்மணிகளின் கூந்தல் நடுவே காணும் கோடு ஸீமந்தம் அல்லது வகுடு எனப்படும். உத்தம ஸ்த்ரீகள் இவ்வகுட்டில் ஸிந்தூரம் அல்லது குங்குமத்தை அணிவார்கள். கணவனுடன் வாழும் பெண்டிரின் வகுடு திருமகள் வாழுமிடமென ஆன்றோர் கூறுவர். இதையொட்டியே தேவியின்

வகுட்டைத் துதிக்கும் இச்செய்யுளில் அவ் வகுடு எல்லாவிதமான நன்மைகளையும் பயக்குமெனக் குறிக்கப்படுகிறது.]

## 45

இயற்கையாகச் சுருண்டும், வண்டுகள் போலப் பளப்பளப்பாகவுமுள்ள கூந்தல்களால் சூழப்பட்ட நின் முகம் தாமரையின் அழகையும் வென்றுவிட்டது. இத்தகைய வடிவுடையதும், அழகிய ஒளி பொருந்திய பற்களாகிய இதழ்களுடன் கூடி, நறுமணம் வீசும் உன் முகத்தாமரையில் காமனை வென்ற பரமசிவனின் விழிகளாகிய பெருந்தேனீக்கள் மயங்கி நிற்கின்றன.

[இச்செய்யுள் அம்பிகையின் முகத்தையும், நெற்றியின் மேற்பகுதியிலுள்ள கூந்தல் திவலைகளையும், பல்வரிசைகளையும் வர்ணிக்கிறது. மன்மத பாணங்களையும் ஏமாற்றிய பரமசிவனின் கண்கள் அம்பிகையின் முக கமலத்தைப் பார்த்து மயங்கியது தேவியின் வர்ணிக்க முடியாத அழகை வெளிப்படுத்துகிறது.]

## 46

வெண்ணிலாப் போல் ஒளிவீசும் நின் நெற்றி, உனது மகுடத்திலிருக்கும் பிறைச்சந்த்ரன் அல்லாது, மற்றொரு அரைச்சந்த்ரன் போல் தோற்றமளிக்கிறது. மேலும் கீழுமாக நோக்கியிருக்கும் உன் மகுடச் சந்த்ரனையும், நெற்றியான சந்த்ரனையும் (இரு அரைச்சந்த்ரன்களையும்) விட்டங்கள் பொருந்தும்படி சேர்த்தால் அம்ருதம் ததும்பும் பூர்ணிமைச் சந்த்ரன் போல் தோற்றுமல்லவா?

[இப்பதிகம் அம்பிகையின் நெற்றியைப் போற்றுகிறது. வளர்பிறையின் எட்டாம் நாள் இரவு சந்த்ரன் அரைவட்டமாக வானத்தில் தோன்றுவான். இங்கு தேவியின் நெற்றி அந்த அஷ்டமீ சந்த்ரனைப் போல் ஒளிமிக்கதாகவும் இருப்பதாகக் கூறப்படுகிறது. அம்பாளின் 1000 பெயர்களில் 'அஷ்டமீசந்த்ர பிப்ராஜத் அலிக ஸ்தலசோபிதா' என்பது ஒன்று.]

## 47

ஹே உமா! எல்லாவுலகிற்கும் பயத்தைப் போக்குபவளே! சிறிது வளைந்துள்ள உன் புருவங்கள், நின் கண்களான வண்டுகளை நாணாகக் கொண்ட காமனின் வில்லைப் போலவும், அது அக்காமன் அவனுடைய கையினால் (உன் மூக்கெலும்பான) பிடித்திருப்பதால், மணிக்கட்டினால் மறைக்கப்பட்டுள்ள நடுவையுடையதாகத் தோன்றுகிறது.

[தேவியின் புருவங்கள் மன்மதனின் வில்லுக்கு இணையாகக் கூறப்படுகிறது. மூக்கெலும்பு மன்மதனுடைய முழங்கையாகவும், புருவங்களினிடையேயுள்ள பகுதி அவனுடைய மணிக்கட்டாகவும் கூறப்படுகின்றன. பயத்தைப் போக்கப் புருவங்களை நெறிப்பது மானிட இயல்பு. நெறித்த புருவங்கள் வளைந்தவனவாகக் காணப்படும். இதையொட்டியே அம்பாளின் புருவங்கள் வளைந்தனவாகக் கூறப்படுகின்றன. 'உமா' என்றால் பார்வதீ. ஆனால் இச்சொல் பலவிதமான பொருள் படைத்ததெனச் சிலரும், இது 'ஓம்' என்பது போல் தேவீப்ரணவம் என்று சிலரும் கூறுவர்.]

## 48

உன்னுடைய வலக் கண் கதிரவனின் உருவு கொண்டு பகலைப் படைக்கிறது. இடக்கண் சந்த்ரவுருவானதால் இரவை உண்டுபண்ணுகிறது. சிறிது மலர்ந்து தங்கத்தாமரை போன்றுள்ள அக்னி ரூபமான நின் நெற்றிக்கண் காலை மாலைச் சந்திகளை ஏற்படுத்துகிறது.

[அம்பிகைக்கு ஈசன் போல் மூன்று கண்கள் உண்டு. தேவியின் கண்கள் பகல், இரவு, ஸந்த்யா காலங்களையுண்டு பண்ணுவதால், அம்பாள் காலத்திற்கப் பாற்பட்டவள் என்பது புலப்படுகிறது. இங்கு தேவியின் கண்களின் மேன்மை சொல்லப்பட்டது.]

## 49

உன் விழிகள் அகன்றிருப்பதால் 'விசாலா', என்றும், மங்களம் பொங்கக்

காரணமாக இருப்பதால் 'கல்யாணி' என்றும், நீலோத்பல மலர்களால் கூட ஜயிக்க முடியாத அழகுடன் கூடியதாகயிருப்பதால் 'அயோத்யா' என்றும், கருணையுடன் கூடியிருப்பதால் 'தாரா' என்றும், விவரிக்க முடியாத இனிப்புடன் கூடியதாகையால் 'மதுரா' என்றும், ஆழ்ந்தவைகளான தால் 'போகவதீ' என்றும், காக்கும் சக்தியுடையதால் 'அவந்தீ' என்றும், அவ்வந்த நகரங்களின் பெயரால் அழைக்கும்படியான குணங்களுடையதாக, அந்த நகரங்களில் உன் பார்வை வெற்றியுடன் (விஜயா என்றும்) விளங்கிக் கொண்டிருக்கின்றது.

[இச் செய்யுள் அம்பிகையின் பார்வையை வர்ணிக்கிறது.]

## 50

கவிகளின் கவிதைகளாகிய மலர்களிலுள்ள மகரந்தத்தைப் பருகுவதில் அவாவுள்ள உன் காதுகளை ஒன்பது வகையான கவிநயங்களையும் உருசிப்பதில் ஆசையுள்ள உன் இரு விழிகளான வண்டுகள் சுற்றிக் கொண்டேயிருப்பதைப் பார்த்த நின் நெற்றிக் கண் பொருமை கொண்டதால் சற்றே சிவந்து காண்கிறது.

[இங்கு தேவியின் கண்கள் மறுபடி வர்ணிக்கப்படுகின்றன. நெற்றிக்கண் சிவந்திருப்பதற்குக் காரணமும் கூறப்பட்டுள்ளது.]

## 51

தாயே! உனது விழிகள் சிவனிடத்தில் காமரஸத்துடனும், மற்றவரிடத்தில் வெறுப்புடனும், கங்கையிடம் கோபத்துடனும், நின் கணவனின் கார்யங்களில் ஆச்சர்யத்துடனும், அவருடைய அணிகலன்களாகிய பாம்புகளிடத்தில் பயத்துடனும், நெற்றிக்கண் சிவந்திருப்பதால் வீரத்துடனும், உன்னை மகிழ்விக்கும் தோழிகளிடம் கேலியுடனும், என்னிடத்தில் கருணையுடனும் பார்வையைச் செலுத்துகின்றன.

(தேவியின் கண்களின் பார்வையின் விநோதங்கள் சொல்லப்பட்டுள்ளன. அப்பார்வையில் எல்லாவிதமான ரஸங்களும் பொருந்தியுள்ளன. ஒன்பது ரஸங்களில் எட்டுக் குறிக்கப்பட்டு, சாந்தரஸம் சொல்லப்படாததற்குக் காரணம் சாந்த ரஸத்தினுல் கண் பார்வையிலோ முகத்திலோ மாறுபாடு ஏற்படாது என்பதால், அது இங்கு விடப்பட்டதென்று தோன்றுகிறது.]

## 52

மலையரசான ஹிமவானின் குலக் கொழுந்தே! உன் இரு கண்களும் காது வரை நீண்டு, அம்பின் இறகுகள் போல் இமை மயிர்களைக் கொண்டு, முப்புரங்களையழித்த பரமசிவனின் மனத்தைக் கலக்கும்படி, காமனுல் காதுவரை இழுத்து விடப்பட்ட அம்புகள் போல் காண்கின்றன.

[இங்கு அம்பாளுடைய கண்களும் இமைகளும் புகழப்படுகின்றன. நீண்ட கண்கள் ஸ்த்ரீ லக்ஷணத்தில் முக்கியமானது.]

## 53

மஹாதேவனின் பத்னியே! மைதீட்டிய நினது மூன்று கண்களும், வெண்மை, சிவப்பு, கருப்பு ஆகிய வெவ்வேறுன நிறங்களுடன், மஹாப்ரளயத்தின் போது உன்னுள்ளே மறைந்து போன ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன் ஆகியோர் மறுபடி படைப்பை யேற்க, ஸத்வ, ரஜஸ், தமோ குணங்களோடு கூடியதுபோல விளங்குகின்றன.

[இச் செய்யுளும் தேவியின் கண்களையே வர்ணிக்கின்றது. கண்ணினுள் காணப்படும் கருப்பு விழி, அதைச் சுற்றியுள்ள வெண்மையான பகுதி, ஓரங்களில் காணப்படும் சிவப்புப் பகுதி ஆகியவை இங்கு ஸத்வ, ரஜஸ் தமோகுணங்களாகச் சொல்லப்படுகின்றன.]

## 54

உன் கணவனுன, எல்லா ஜீவராசிகளுக்கும் பதியான பரமசிவனிடம் மனம் ஒன்றியவளே! உலகைத் தூய்மைப் படுத்தும் சோணு, கங்கை, காளிந்தீ (யமுனை)

ஆகிய நதிகளின் கூடுமிடம் போலிருக்கும் உன் கண்கள், அந்நதிகள் போல் சிவப்பு, வெண்மை, கருப்பு நிறங்களைக் கொண்டு, என் போன்றவர்களைப் புனிதமாக்கவே தோன்றியவை போல் விளங்குகின்றன.

[இங்கு அம்பிகையின் கண்களின் நிறங்களும் அக் கண்களின் மஹிமையும் குறிக்கப்படுகின்றன. சோணு நதியின் நீர் சிவப்பு நிறம், கங்கையின் நீரின் வர்ணம் வெளுப்பு, யமுனை நதியின் ஜலம் கருப்பு. இச் செய்யுளில் தேவிக்குப் பக்தனிடமுள்ள அன்பும் சொல்லப்பட்டுள்ளது.]

## 55

பர்வதராஜகுமாரியே! உன் கண்களைத் திறந்து மூடுவதால் உலகின் படைப்பும், அழிதலும் ஏற்படுவதாக சான்றோர் கூறுவர். படைக்கப்பட்ட உலகங்கள், கண்களை மூடிவிட்டால் அழிந்திடுமோ என்று எண்ணி, கருணையினுல், அவ்வுலகுகளைக் காக்கும் நோக்குடன் இமைகொட்டாது எப்பொழுதும் விழித்திருக்கிருயெனத் தோன்றுகிறது.

[இச் செய்யுள் தேவியின் கண்களின் ஏற்றத்தையும் அவைகள் எப்பொழுதும் விழித்திருப்பதின் காரணத்தையும் கூறுகிறது.]

## 56

ஹே அபர்ணே! காதுகள்வரை நீண்டுள்ள உன் விழிகள் தங்களைப் பற்றி கோள் சொல்லுகின்றனவோ எனப் பயந்து, மீன்கள் தண்ணீரிலேயே மறைந்து கொண்டிருக்கின்றன. இந்த உன் விழியிலுள்ள திருமகளும் பகலில் நீலோத்பல மலர்களிலிருந்து நின் கண்களுக்கு வந்து, இரவில் அப்பூக்களில் நுழைகின்ருள்.

[இங்கும் அம்பிகையின் கண்கள் வர்ணிக்கப்படுகின்றன. தேவியின் விழிகள் பெண் மீன்களின் விழிகளுக்கும், நீலோத்பல மலர்களுக்கும் தொடர்பு படுத்திக் கூறப்படுகின்றன. அம்பிகைக்குத் தனது அடியார்கள் விரும்புவதையெல்லாம் அளிக்கும் ஆற்றலிருப்பதாலும், அவள் பார்வதியாக அவதரித்துப் பரமசிவனைக் குறித்துத் தவமிருக்கையில் இலையைக் கூடத் தின்னுதிருந்தமையாலும் அவளுக்கு 'அபர்ணு' என்று பெயர் ஏற்பட்டதாம்.]

## 57

ஹே சிவே! சந்த்ரன், விலங்குகள் வாழும் காடென்றும், மாளிகையென்றும் வேறுபாடின்றி எங்கும் ஒரே விதமாக ஒளி வீசுவது போல், நீண்டதும், நீலோத்பல மலரின் காந்தியைக் கொண்டதுமாகிய உன் கடைக்கண்பார்வை வெகுதூரத்திலுள்ள தகுதியற்ற என் மீதும் விழும்படி செய்தால் உனக்கு எத்தகைய நஷ்டமும் கிடையாது.

[தேவியின் கடாக்ஷ மஹிமையும், அம்பிகையின் சமநோக்கும் இச்செய்யுளில் காணப்படுகின்றன.]

## 58

மலையரசின் மகளே! வளைந்த நின் பொட்டுப் பகுதிகள் (கண்களுக்கும் காதுகளுக்கும் இடையே நெற்றியின் ஓரங்களிலுள்ள பகுதிகள்) உன் காதுகள் வரை நீண்ட கண்களை அம்புகளாகப் பூட்டப்பட்ட மன்மதனுடைய வில் போலிருப்பதாக எல்லோருக்கும் தோன்றும்.

[இதில் அம்பிகையின் பொட்டுப் பகுதிகள் வர்ணிக்கப்படுகின்றன. கண்ணின் பக்கமாக பொட்டுப் பிரதேசம் வளைந்திருப்பதாகக் கூறப்படுகிறது.]

## 59

உனது தாடங்கங்கள் (காதணிகள்) நினது கன்னங்களில் ஒளிவீசிப் ப்ரதிபிம்பத்தை ஏற்படுத்துவதால், உன் முகம் நான்கு சக்ரங்களைக் கொண்ட மன்மதனின் தேராகத் தோன்றுகிறது. இத்தகைய தேரில் இருப்பதினுலேயே மன்மதன், ஸூர்யனையும் சந்த்ரனையும் சக்ரங்களாகக் கொண்ட பூமியான தேரில் ஏறிக்கொண்டு, படைகளால் சூழப்பட்டு, போருக்காயத்தமாக இருக்கும் பரமசிவனுடன் போர்புரிய மிக ஊக்கத்துடன் இருக்கிருன் போலும்.

[அம்பிகையின் கன்னங்களேயும் தாடங் கங்களேயும் பற்றி இங்கு கூறப்படுகிறது. அம்பிகையின் முகத்தின் அழகினுல் மயங் கிய சிவன் மன்மதனுல் தோற்கடிக்கப்பட்ட தாக இங்கு சுட்டிக் காட்டப் படுகிறது.]

60

பரமசிவனின் மனேவியே! அமுதப் பெருக்கைப் போல் இனியதாகவுள்ள உன் சொற்களின் ருசியை அனுபவித்து, சிறிது சிறிதாக உண்ணுவது போல், ஸரஸ்வதி தன் செவிகளால் பருகுகின்ருள். உன் பேச்சிலுள்ள அதிசயங்களே அவள் தலே யை அசைத்து மெச்சுகின்றபோது, அவ ளது காதிலுள்ள குண்டலங்கள் ஒலிக்கின் றன. அந்த ஒலி உன் கேள்விகளுக்குப் பதில் கூறுவது போலிருக்கிறது.

[இச்செய்யுளில் அம்பிகையின் சொல் இனிப்பு, அதிலுள்ள ரஸம் ஆகியவை குறிப்பிடப்படுகின்றன.]

61

ஹிமவானின் குலக் கொடியே! முத் துக்களாலான நத்தைப் பூண்டிருக்கும் உன் மூக்கு நாங்கள் விரும்பும் யாவற்றை யும் அருளட்டும். அது மூங்கில் போல் முத்துக்கள் நிறைந்திருப்பதால், அம் முத்துக்களில் ஒன்று மூச்சு விடுவதால் வெளியே வந்து மூக்குத்தியாகக் காண் கிறது.

[இதில் அம்பாளுடைய மூக்கு வர்ணிக் கப்படுகிறது. அது மூங்கிலுக்கு ஒப்பிடப் பட்டுள்ளது. முற்றிய மூங்கிலினுள் முத் துக்கள் இருக்குமென்பர். இங்கு அம் பிகையின் மூக்கின் உட்புறத்திலும் முத்து இருப்பதாகவும் உவமைக்குப் பொருத்த மாகச் சொல்லப்பட்டுள்ளது.]

62

கவர்ச்சியான பல்வரிசைகளேயுடைய வளே! இயற்கையாகச் சிவப்பாகவுள்ள உன் அழகான உதட்டிற்கு ஈடான பொருள் ஏதாவது ஒன்று இருக்குமாளுல், ஒருவேளே அது பவழக் கொடியின் பழ மாகத் தான் இருக்கவேண்டும். கோவைப் பழத்தை உன்னுடைய உதட்டிற்கு உவமை யாகச் சொல்ல முடியுமாயென்ருல், அதற் குரிய சிவப்பு உன்னுடைய உதட்டின் சிவப்பினுல் அந்த நிறத்தையடைந்தது மன்றி, உன் உதட்டின் சிவப்பில் ஒரு வீசம் பகுதி கூட அதற்கில்லேயே!

[அம்பிகையின் உதட்டின் அழகும் நிறமும் வர்ணிக்கப்படுகிறது. உதட்டின் சிவப்பு நிறத்திற்கு ஸமமான வஸ்துவில் லேயென்று தெரிகிறது.]

63

உன்னுடைய புன்முறுவல் உன் சந்த்ரன் போன்ற முகத்தினின்று பெருகும் நிலவு போன்ற கதிர்களே ருசியுடன் உண்ணும் சகோரப் பறவைகளுக்கு அந்த அமுதம் திகட்டவே, அவைகளின் அலகு கள் மறத்துப் போனதால், அப்பறவைகள் ருசி மாற்றம் வேண்டி வானிலுள்ள சந்த்ர னின் அமுதக் கிரணங்களேப் புளித்த கஞ்சி யாக நினேத்துப் பருகுகின்றன.

[தேவியின் புன்னகை சந்த்ரனின் நிலாவைக் காட்டிலும் அழகானதென்றும் அதனுல் அவளுடைய முகம் சந்த்ரனேப் போன்றதாக ஒளிமயமாக இருப்பதாகவும் கூறப்படுகிறது.]

64

தாயே! உன் புருஷனுடைய விளே யாட்டு விநோதங்களே ஜபம் செய்வது போல் இடைவிடாது சொல்லிக் கொண் டிருக்கும் உன் நாக்கு செம்பரத்தைப் பூப் போல் சிவந்திருக்கிறது. தூய வெண் மையாகவுள்ள கலேமகள் அந்த உன் நாக்கில் வீற்றிருப்பதால், மாணிக்கக் கல் போல் சிவந்து விட்டாள்.

[அம்பிகையின் நாவின் அழகும் அவ ளுடைய நாவில் நாமகள் வீற்றிருப்பதும் இச்செய்யுளில் கூறப்படுகின்றன.]

65

தாயே! அரக்கர்களுடன் போர் புரிந்து வெற்றியுடன் திரும்பிய முருகனும், திருமாலும், இந்த்ரனும் தங்களுடைய

வெற்றியைத் தெரிவிக்க உன்னிடம் வந்து, தலைக் கவசங்களைக் கழற்றி விட்டு உன்னை வணங்கி, சண்டிகேச்வரனுக்குரிய சிவ நிர்மால்யத்தை விரும்பாது, உன்னால் மென்று துப்பப்பட்ட தாம்பூலத்தை ஆவலுடன் உண்கிறார்கள்.

[இங்கு அம்பிகையின் உச்சிஷ்டத்தின் மேன்மையும், அதைத் தேவர்கள் கூட ப்ரஸாதமாக ஏற்பதும் சொல்லப்பட்டுள்ளன.]

## 66

உன் புருஷனான பரமசிவனின் செயல்களைப்பற்றி ஸரஸ்வதி வீணையில் வாசித்துக் கொண்டிருக்கும் போது, அதைக் கேட்டு, நீ அவளுடைய வீணாகானத்தைப் புகழ்ந்து பேச ஆரம்பித்தபொழுது, உன் சொற்களின் இனிமை வீணையின் இனிமையைக் காட்டிலும் பன்மடங்கு அதிகமாக இருக்கக் கண்டு, ஸரஸ்வதி வெட்கி, தன் வீணையை உரையால் மூடி விட்டாள்.

[இங்கு அம்பிகையின் குரலின் மேன்மை குறிக்கப்படுகிறது. நாமகளின் வீணா நாதத்தைக் காட்டிலும் இனிமையானதெனச் சொல்லப்பட்டுள்ளது. இதையே லலிதாஸஹஸ்ர நாமத்தில், 'நிஜஸல்லாப மாதுர்ய வினிர்பர்த்ஸித கச்சபீ', என்று சொல்லப்பட்டுள்ளது.]

## 67

மலைமகளே! அன்புடன் உன் தந்தை ஹிமவானால், அவனுடைய விரல் நுனிகளால் தடவப்பட்டதும், உன்னுடைய உதட்டழகில் எப்பொழுதும் ஆசையுள்ள உன் கணவன் பரமசிவனால் அவ்வப்போது உயரத் தூக்கப்பட்டதும், உவமையற்றதும், உன் முகமான கண்ணாடிக்கு பிடிபோன்றதுமான முகவாய்க்கட்டையின் அழகை யாரால் வர்ணிக்க முடியும்?

[இங்கு தேவியின் முகவாய்க்கட்டை உவமையற்ற அழகுடையதென்றும், அது முகமாகிய கண்ணாடியின் பிடிபோன்றதென்றும் சொல்லப்பட்டுள்ளது.]

## 68

பரமசிவன் உன்னுடன் எப்பொழுதும் கூடியிருப்பதாலேற்படும் மயிர்க் கூச்சலினால் முள் முள்ளாக இருக்கிறது போல் தோன்றும் உன் கழுத்து உன் முகத் தாமரையின் தண்டு போல் தெரிகிறது. அக்கழுத்தில் அணியப்பட்டிருக்கும் முத்து மாலை இயற்கையில் வெளுப்பாயினும், நின் கழுத்தில் பூசப்பட்டுள்ள கருப்பான அகுரு வாசனைப் பூச்சினால் கரிய நிறமடைந்து, அந்த அகுருப் பூச்சாகிய சேற்றில் உன் கழுத்தாகிய தாமரைத் தண்டின் வேர்கள் ஓடியிருப்பது போல் தோன்றுகிறது.

## 69

இசையின் கதி, கமகம், கீதம் ஆகியவற்றில் திறமையுள்ளவளே! உன் கழுத்திலுள்ள மூன்று கோடுகள் உன்னை மணந்தபோது பரமசிவன் உன் கழுத்தில் கட்டிய தாலிச் சரட்டின் அடையாளம் போலும், அக்கழுத்திலிருந்து வெளிப்படும் இசைக்கு அடிப்படையான மூன்று க்ராமங்களின் பாகுபாடுகளைக் குறிக்கும் எல்லைக் கோடுகளைப் போலவும் விளங்குகின்றன.

[ஸாமுத்ரிகாலக்ஷணப்படி கழுத்தில் மூன்று கோடுகள் காணப்படுவது உயர்ந்த அழகையும், நல்ல அதிர்ஷ்டத்தையும் காட்டுமென்பர். இங்கு அம்பிகையின் கழுத்தழகையும் அதிலுள்ள மூன்று கோடுகளையும், அம்பிகையின் ஸங்கீத சாஸ்த்ர ஞானத்தையும் புகழ்கிறார்கள் ஸ்ரீ ஆசார்யாள்.]

## 70

ப்ரம்ஹா அவருடைய ஐந்தாவது தலையைப் பரமசிவன் கிள்ளியெறிந்து விட்டதால், பரமசிவனின் நகங்களுக்குப் பயந்து, உன்னிடம் சரணடைந்து, தன்னுடைய எஞ்சியுள்ள நான்கு தலைகளுக்கும் காப்புக் கிடைக்கும் என்ற எண்ணத்துடன், தாமரையின் தண்டு போன்றவையும், மெல்லிய மிருதுவான கொடிபோன்றதுமான நின் நான்கு கைகளையும் தன் நான்கு நாக்குகளாலும் துதிக்கிறார்.

[தேவியின் கைகளின் அழகை நான்கு நாக்கைப் படைத்த நான்முகனைத் தவிர பிறரால் புகழ முடியாதென்பது இதன் கருத்து.]

71

உமையே! புதிதாக மலர்ந்த தாமரையின் அழகைக் காட்டிலும் அதிகக் காந்தியுடன் கூடிய நின் கை நகங்களின் அழகை எங்ஙனம் வர்ணிப்போம்! ஒருவேளை தாமரைப்பூ, அதில் வாஸஞ்செய்யும் மஹாலக்ஷ்மியின் திருவடிகள் மருதாணியின் வண்ணக் குழம்பினால் பூசப்பட்டபின் சிவப்படைந்திருக்கும்போது அவைகளுடன் கூடியிருப்பதால், உன்னுடைய கை நகங்களின் காந்தியின் ஒரு திவலைக்கு ஸமமான காந்தியை அடைந்திருக்கலாம்.

[மஹாலக்ஷ்மியின் சிவப்புப் பூச்சுடைய பாதங்களின் சேர்க்கையால் தாமரை சிவந்து காணப்படுகின்றது. அந்தத் தாமரைகளின் காந்தி அம்பாளின் நகங்களின் காந்தியில் ஒரு சிறிய பகுதியே.]

72

தேவி! விநாயகன், முருகன் ஆகிய உன்னிருமகன்களும் ஒரே காலத்தில் பால் பருகும் உன்னுடைய மார்பகங்கள் எப்பொழுதும் பால்ப் பெருக்கைக் கொண்டவைகளாக உள்ளன. அந்த மார்பகங்களின் பருமனைப் பார்த்து, குழந்தை விநாயகன் தன் யானை முகத்தின் இரு மத்தகங்களும் இருக்கின்றனவா என்று தன் கைகளால் தடவிப் பார்க்கையில், உங்கள் கேலிக்கு இலக்காகிறான். அம் மேன்மை பொருந்திய மார்பகங்கள் எங்கள் துயரத்தை எப்பொழுதும் போக்கட்டும்.

[இங்கு தேவியின் மார்பகங்களின் பரிமாணமும், மேன்மையும், அவைகளைத் துதிப்பதால் ஏற்படும் பயனும் சொல்லப்படுகின்றன.]

73

மலையரசின் வெற்றிக்கொடி போன்றவளே! உன் மார்பகங்கள் வெறும் பால் நிறைந்தவைகளல்ல, அம்ருதம் நிறைந்த மாணிக்கங்களாலான பாத்ரங்கள் என்பதில் ஐயமில்லை. ஏனெனில் அம் மார்பகங்களிலிருந்து பெருகுவதைப் பருகும் விநாயகரும், முருகனும் குழந்தைப் பருவத்தைத் தாண்டி வளர்ச்சியடையாது, சிற்றின்பம் தெரியாத குழந்தைகளாகவே இருந்து வருகின்றனர்.

[இதில் தேவியின் மார்பகங்களிலிருந்து பெருகும் பால் அமுதத்திற்கொப்பானதாகக் குறிக்கப்படுகிறது.]

74

தாயே! உன் மார்பகங்களின் நடுவில் கஜாஸுரனின் மத்தகத்திலிருந்து எடுக்கப்பட்ட முத்துக்களாலான மாலை ஒளி வீசுகின்றது. அம் முத்துக்களின் மீது உன் உதட்டின் சிவப்பு ஒளி வீசவே, அவை வெளியில் சிறிது சிவப்பாகவும், உள்ளே பல வர்ணங்களுடனும் ப்ரகாசிப்பதால் அம்மாலை பரமசிவனின் சூரத்தன்மையுடன் கலந்த புகழ் போலக் காண்கிறது.

[இங்கு தேவியின் மார்பகப் பகுதியில் அணியப்பட்டுள்ள முத்துமாலை வர்ணிக்கப்படுகிறது. புகழ் வெண்ணிறமென்பதும் பராக்ரமம் சிவப்புவர்ணமென்பதும் கவிகளின் துணிபு.]

75

மலைமகளே! உன் மார்பகத்திலிருந்து பெருகும் பாலைப் பருகிய த்ராவிட நாட்டுச் சிறு குழந்தையொன்று பிற்காலத்தில் கவியரசர்களும் மெச்சத்தக்க கவியானதால், உன் பால், ஹ்ருதயத்திலிருந்து பெருகும் பாற்கடலோ, கல்விப் பெருங் கடலின் பெருக்கோ என எண்ணுகிறேன்.

[இங்கு அம்பிகையின் மார்பகப் பாலின் ஏற்றம் சொல்லப்படுகிறது. இச் செய்யுளின் த்ராவிட நாட்டுக் குழந்தை யார் என்பது பற்றி பலவாறான கூற்றுகள் உள. லக்ஷ்மீதரர், கைவல்யாச்ரமர் போன்ற சில விரிவுரையாளர்கள் இக் குழந்தை ஆதி சங்கரரே என்றும், (அதற்குச் சான்றாக பின்னவர் ஒரு கதையையும்) சொல்லி

யுள்ளனர். ஆனல் ஸௌந்தர்யலஹரீயின் கடைப்பாவில் அகம்பாவமற்ற முறையில் கூறியுள்ள அவையடக்கத்திற்கு இது முற்றிலும் பொருந்தாது. மற்றும் சிலர் இந்த த்ராவிட சிசு ஞானசம்பந்தர் என்று கூறுகின்றனர். சில- உரையாசிரியர்கள் சீர்காழியில் சம்பந்தருக்கு உமையாள் ஞானப்பால் ஊட்டிய கதையைக் காஞ்சியில் நடந்ததாகக் கூறுகின்றனர். ஸுதா வித்யோதினீ என்ற விரிவுரையில் த்ரவிட சிசு என்பவர் ஸௌந்தர்யலஹரீயை எழுதியது சங்கரர் அல்லவென்றும், த்ரமிடதேசத் தரசஞன ப்ரவரஸேனன் என்றும், அவனையே அச்சொல் குறிப்பதாகவும், மற்றும் அதையொட்டிய வரலாறும் உள்ளன. இத்தகைய பல்வேறு அபிப்பிராயங்களினிடையே எது சரியென்று சொல்வதற்கில்லை.]

## 76

மலைமகளே! தாயே! பரமசிவனின் நெற்றிக் கண்ணின் தீயினுல் எரிக்கப்பட்ட மன்மதன் அத் தீயினின்று தப்ப, ஆழ்ந்த நின் நாபி மடுவில் (தொப்புழ்) குதித்த பொழுது, அவன் உடல் நனைந்த போது ஏற்பட்ட புகையை உன்னுடைய உரோம வரிசையென மக்கள் கூறுவர்.

[இங்கு அம்பிகையின் நாபியும் அதற்கு மேலுள்ள உரோம வரிசையும் புகழப்படுகின்றன. நெருப்பில் தண்ணீர் சேர்ந்தால் கிளம்பும் புகைபோன்றதாகவும் தேவியின் நாபிக்கு மேலுள்ள உரோமாவளி குறிக்கப்படுகிறது.]

## 77

ஹே சிவே! யமுனை நதியின் சிறிய அலைகள் போன்ற உருவத்தையுடையது உன் உரோம வரிசை. அது நின் நாபியில் (தொப்புழில்) முடிவடைகிறது. உனது இரு மார்பகங்களும் பருமஞக இருப்பதாலும், அவைகள் உராய்வதாலும், இந்த உரோமாவளிகுன்றி, மலைகளினூடே அகப்பட்ட வானம் குகையில் நுழைவது போல், உன் நாபியில் முடிவடைகிறது.

[இங்கு முன் செய்யுளில் புகழப்பட்ட உரோமாவளி பற்றியே மேலும் விவரங்கள் சொல்லப்படுகின்றன. இங்கு யமுனை நதியின் ஜலம் கருப்பானதால் உரோமாவளியும் கருப்பு. மார்பகங்களுக்கிடையே உரோமாவளி ஆரம்பமாகி நாபியில் முடிவது வர்ணிக்கப்படுகிறது.]

## 78

மலைமகளே! உன் நாபிப் பகுதி (தொப்புழ்) கங்கையின் வெள்ளத்தில் காணப்படும் பெரும் சுழல் போலிருப்பினும் அசைவும், அழிக்கும் தன்மையுமில்லாததாகவும், மார்பகங்களை மொட்டுகளாகக் கொண்ட உரோமாவளியான கொடியின் வேர்களுக்குப் பாத்திபோலவும், ரதியின் விளையாட்டில்லமாகவும், பரமசிவனின் தவத்தின் முடிவுக்குரிய குகைவாயிற்படி போலவும் மற்றும் வர்ணிக்க முடியாத வடிவுடன் கூடியதுமாகக் காட்சியளிக்கிறது.

[இச் செய்யுள் தேவியின் நாபியை பல உவமைகளுடன் அழகாகப் புகழ்கிறது. நாபி காம உணர்ச்சி ஏற்படும் பகுதியென இங்குள்ள மூன்ருவது நான்காவது உவமைகள் எடுத்துக்காட்டுகின்றன.]

## 79

பெண்மணிகளுள் திலகமாய் விளங்குபவளே! மலையரசின் மகளே! இயற்கையாகக் குறுகிய உன் இடுப்பு மார்பகங்களின் பளுவினல் சற்று வளைந்ததாகக் காண்பதை நோக்கிடின், அது ஒடிந்து விடும் போலவும், வெள்ளம் பெருகும் ஆற்றின் மெல்ல மெல்ல இடிந்து கொண்டிருக்கும் ஆற்றின் கரையிலுள்ள மரத்தின் நிலையிலுள்ளது போலவும் காணப்படுவதால் அந்த இடை ஒடிந்துபோகாமல் நீண்டகாலம் நன்ருக இருக்கட்டும்.

[இங்கு அம்பிகையின் இடையின் அழகு வர்ணிக்கப்படுகிறது. ஆற்றங்கரையிலுள்ள மரத்திற்கு ஒப்பிட்டிருப்பது மிகவும் பொருத்தமானது.]

## 80

தேவி! பருத்த, உயர்ந்த தங்கக் குடுவைகள் போன்ற நின் மார்பகங்களை

மன்மதன் உருவாக்கும் போது, அவைகளின் பளுவைத் தாங்காது உனது இடுப்பு ஒடிந்து விழாமலிருக்க, வள்ளிக் கொடிகளால் மூன்று முறை சுற்றியது போல் உன் இடையில் மூன்று ரேகைகள் காணப்படுகின்றன.

[இப்பாவிலும் அம்பாளுடைய இடுப்பினழகும், அடிவயிற்றைச் சுற்றியுள்ள மூன்று கோடுகளும் சொல்லப்படுகின்றன. உத்தம ஸ்திரீகளின் நெற்றியிலும், கழுத்திலும் அடிவயிற்றிலும் மூன்று மடிப்புகள் இருப்பது அழகின் குறிக்கோள். இங்கு சொல்லப்பட்ட வள்ளிக்கொடியென்பது அம்ருதவல்லி எனும் சீந்துக்கொடியென்று சிலர் கூறுகின்றனர். இங்கு குறிக்கப் பட்ட விவரத்தையே லலிதா ஸஹஸ்ர நாமத்தில் அம்பிகையின் இடுப்பைப் பற்றி சொல்லப்படுகிறது—'ஸ்தனபார தளன் மத்ய பட்டபந்த வளித்ரயா'.]

## 81

ஓ பார்வதீ! உன்னுடைய இடுப்பின் பின் பகுதியும் பக்கங்களும் பருமனுலும், அகலத்தாலும், பளுவாலும் பூமியைக் காட்டிலும் கனமாகவும், அதை மறைத்தும் இருப்பதால் அத்தகைய பருமனுன அகலமான பெரும் பகுதியை உன் தந்தையான ஹிமவான் தன் அடிவாரத்திலிருந்து எடுத்து உனக்குச் சீராகக் கொடுத்தான் போல் தோன்றுகிறது.

[இச் செய்யுளில் அம்பிகையின் நிதம்பப் பிரதேசம் மிகவும் பெரியதாகவும் கனத்ததாகவும் இருப்பதாகச் சொல்லப் படுகிறது. ஹிமயமலேயின் ஒரு பெரும் பகுதியைப் பெயர்த்து, அம்பிகையின் தந்தை அவளுக்குத் திருமணக் காலத்தில் சீராகக் கொடுத்தாரோ என ஆச்சர்யம் தெரிவிக்கப்பட்டுள்ளது.]

## 82

மலேமகளே! வேதப் பொருளறிந்தவளே! நின் தொடைகளிரண்டும் மேலான யானைகளின் துதிக்கைகளேப் போன்றும், தங்கத்தாலான வாழைமரங்களின் பட்டைகளே வென்ற காந்தியுடனும் கூடியதாக இருக்கின்றன. ஆனுல் உன் முழங்கால்ச் சில்கள் உருண்டையாகவும், உன் கணவருக்கு நமஸ்காரம் செய்வதால் கடினமாகியனவாகவும், எல்லே யானைகளின் மத்தகங்களே வென்றதாகவும் காணப்படுகின்றன.

[இங்கு அம்பிகையின் தொடைகளும், முழங்கால்களும் வர்ணிக்கப் பட்டதுடன் தேவி எல்லா வேதப் பொருள்களேயும் அறிந்தவளென்றும் குறிப்பிடப்படுகிறது.]

## 83

மலேயரசின் மகளே! உன் கணேக்கால்கள் பரமசிவனே வெல்ல, பாணங்களேக் கொண்ட (பத்துவிரல்களே) அம்பராத் தூணிகள் போன்று காணப்படுகின்றன. அவைகளிலுள்ள பத்து விரல்களிலிருக்கும் நகங்களின் நுனிகள், உன் பாதங்களில் வணங்கும் தேவர்களின் மகுடங்களாகிய சாணேக்கற்களில் தீட்டபட்டு, அம்புகளின் நுனியிலுள்ள இரும்புக் கூர்கள் போலக் காட்சியளிக்கின்றன.

[இப்பாவில் தேவியின் இரு கணேக் கால்களும், நகங்களும் வர்ணிக்கப்படு கின்றன. மன்மதன் ஐந்துபாணங்களேக் கொண்டவன். அவைகளால் பரமசிவனே வெல்லமுடியாததால் இப்போது அவன் அம்பிகையின் சரணங்களேத் தியானித்து அதன்பயனுக வெற்றியடைவதாக உள் படையாகக் குறிக்கப்படுகிறது.]

## 84

தாயே! எந்த உன் பாதங்களே வேதங்கள் தங்கள் தலேயணியாகக் கொள்கின்றனவோ, எந்தப்பாதங்கள் பரமசிவனின் தலேயை அலங்கரிக்கும் கங்கையின் ஜலத்திறல் கழுவப்படுகின்றனவோ, எந்தப் பாதங்களுக்கு அவைகளில் வணங்கும் விஷ்ணுவின் கௌஸ்துப மணியின் காந்தியால் சிவப்புவர்ணம் தீட்டப்படுகிறதோ அத்தகைய நின் பாதகமலங்களே என் தலே மீது தயவுடன் வைப்பாயாக.

[இங்கு தேவியின் சரணமஹிமை போற்றப்படுகிறது. மேலும் பக்தனின் சரணு

கதியும், அம்பிகையின் சரணங்களே எல்லோருக்கும் புகலிடம் என்ற தத்வமும் குறிக்கப்படுகிறது. இங்கு வேதங்கள் என்று சொல்லப்படுவது உபநிடதங்களைக் குறிக்கும்.]

## 85

உன் பாதங்களினுல் உதைபட வேண்டுமென விரும்பும் அசோகமரத்திடம் பரமசிவன் பொருமைப் படுகிருர். அத்தகைய, அழகாகவுள்ள, ஈரமான செம்பஞ்சுக்குழம்பின் ஒளியுடன் கூடியதுமான உன் இரு சரணங்களுக்கும் என் வந்தனத்தைத் தெரிவிக்கிறேன்.

[இச்செய்யுளில் அம்பிகையின் பாதங்களின் மேன்மை சொல்லப் படுகிறது. அசோக மரம் ஸ்த்ரீகளின் கால்களால் உதைபட்டாலே பூக்குமென்பது மரபு. முன்பாட்டில் சொல்லப்பட்ட சரணுகதியே இங்கு தொடர்ந்து கூறப்பட்டுள்ளது.]

## 86

ஒரு ஸமயம் பரமசிவன் தவருக வேறெரு ஸ்த்ரீயின் பெயரைச் சொல்லவே, உனக்கேற்பட்ட கோபத்தைத்தணிக்க, அவர் உன் பாதங்களின்முன் வணங்க, அப்பொழுதும் நின் கோபம் தணியாது, நீ அவரைக் காலாலுதைக்க, அவ்வமயம் உன் கால்ச்சிலம்பின் மணிகளினுல் ஏற்பட்ட ஒலி, மன்மதன் (தன்னைப்பரமசிவன் நெற்றிக்கண்ணுல் எரித்ததாலேற்பட்ட) பழங்காலத்தியப் பகையை நினைத்துப் பழிக்குப்பழி வாங்கி ஜயபேரிகை கொட்டுவது போல் தோன்றுகிறது.

[இங்கு அம்பிகையின் பாதச்சிலம்பின் வர்ணனையும், பாதங்களை ஸேவிப்பதால் ஏற்படும் நன்மைகளும் புலனுகின்றன. இங்கு தேவீ தேவர்களின் ஊடல் பற்றிய ஒரு விஷயமும் காண்கிறது. மன்மதன் அம்பாளை உபாஸித்து, சரணுகதியடைந்ததால் பரமசிவனையே வெல்ல முடிந்ததென்பதைப் பக்தர்களுக்கு எடுத்துக் காட்டுகிறது.]

## 87

தாயே! பனிமலையில் நடந்து பழகியனவும், இரவு, பகல், வைகறை, அந்தி வேளை; ஆகிய எல்லாக் காலங்களிலும் மலர்ந்திருப்பவைகளும், நின் பக்தர்களுக்கு லக்ஷ்மியை கொடுக்கின்றவையுமான நின் திருவடிகள், பனியினுல் அழிவடைகின்றவும், இரவில் மூடிக் கொள்வதும், விரும்பினுல் திருமகள் அதனில் வந்து தங்குவதுமான தாமரை மலரை வென்று விட்டதில் வியப்பென்ன?

[இப்பாவில் தொடர்ந்து அம்பிகையின் திருவடிகளின் மேன்மையும், அழகும், அவைகளைச் சரணடைவதால் ஏற்படும் நன்மைகளும் விவரிக்கப் படுகின்றன. தேவியை ஹிமவானின் மகளாகக்கருதி, அவளுக்குப் பனிமலையில் நடந்து பழக்கமிருப்பதாகவும், அதில் திறமையிருப்பதாகவும் சொல்லப்படுகிறது.]

## 88

புகழின் இருப்பிடமானதும், துன்பங்களும், விபத்துக்களும் நெருங்க முடியாததுமான உன் உள்ளங்கால்களை ஆமையோட்டிற்கு ஈடான கடினமுடையவையென கவிகள் ஏன் வர்ணித்தார்களோ! கருணை ததும்பும் மனமுடைய பரமசிவன் உன்னுடைய திருமணக்காலத்தல் உன் உள்ளங்காலை அம்மிக்கல்லின் மீது எடுத்துவைக்க எப்படி மனமிசைந்தாரோ!

[இச்செய்யுளில் தேவியின் உள்ளங்கால் அழகும் அதன் மிருதுவான தன்மையும் சொல்லப்படுகின்றன. உள்ளங்கால் வளைந்திருக்கிறபடியால் ஆமையின் ஓட்டிற்கு ஒப்பிடப்படுகிறது. பரமசிவன் அம்பாளின் சரணங்களை அம்மிக் கல்லில் வைப்பதென்பது, வேதவிதிப்படி செய்யப் படும் திருமணங்களில் நடைபெறும் 'ஸப்தபதீ' என்ற சடங்கை மனதில் வைத்தெழுதப்பட்டுள்ளது.]

## 89

ஹே சண்டி! தேவலோகத்திலுள்ள கற்பகவ்ருக்ஷம் போன்ற மரங்கள் தங்கள் துளிர்கொண்ட கிளைகளான கைகளினுல்.

அவ்வுலகில் எல்லா வி த மா ன நன்மை களுடனும் வாழும் வேதர்களுக்கு மாத்திரம் விரும்பக்கூடிய பயன்களைத் தருகின்றன. நின் பாதங்களோ இவ்வுலகில் வா ழு ம் ஏழைகளுக்கும் கூட விரும்புமளவுக்கு மே லாக, எல்லாவிதச்செல்வங்களையும், எப் பொழுதும், விரைவில் கொடுக்கக் கூடிய வை. எ ன வே ஒளிவீசும் நகங்களுடன் கூடிய நின் திருவடிகள் தேவலோகத்து மரங்களைக் கேலிசெய்வதுபோல் தோன்று கிறது. இம்மட்டோ! அத்திருவடிகள், கூப்பிய கைகளுடன் தேவஸ்த்ரீகளால் வணங்கப்படுவதால், அவை அம்மாதர் களின் கைகளான தாமரைகளை மூடும்படி செய்யும் ஒளியோடு கூடிய சந்த்ரனைப் போல் ப்ரகாசிக்கின்றன.

[இங்கு அம்பாளின் சரணங்களின் அழகும் மஹிமையும் தொடர்ந்து சொல்லப் படுகின்றன. அன்னையை உபாஸிப்பதால் அளவிற்கதிகமாகவும் விரைவிலும் நன்மை களைப் பெறலாமென்பது புலனாகிறது.]

## 90

எளியவர்களுக்கும் வேண்டிய அளவு செல்வத்தை வாரியளிப்பதும், அழகு எனும் மகரந்தப்பொடியை வாரி இறைப் பதும், கல்பக பூக்களினது அழகு போன்ற காந்தியையுடயதுமான உ ன் திருவடி களில், ஆறு கால்களைக் கொண்ட வண் டாக மொய்க்கும் நிலை ஆறு புலன்களுடன் கூடிய என் ஆன்மாவிற்குக் கிட்டட்டும்.

[இப்பாவில் அம்பிகையின் பாதகமலங் களின் அழகும் அவைகளில் சரணடையும் நோக்கும் குறிக்கப்படுகின்றன. அத் திரு வடிகள் பக்தனின் மனதில் எப்போதும் பதிந்திருக்க வேண்டுமென்று சுட்டிக் காட்டப்படுகிறது. தே வி யி ன் சரணங் கள் கல்பகப்பூக்களுக்கு ஒப்பிடப்பட்டுள்ள தாலும், அவை மகரந்தப் பொடியை வாரி யிறைப்பதாகக் கூறப்பட்டதாலும் ஆசார் யாள் தன்னை வண்டாக மாற்றிக் கொண் டுள்ளார். வண்டிற்கு ஆறு கால்கள் இருப்பது போல் மனிதனுக்கு ஆறு புலன் கள்—தோல், கண், காது, நாக்கு, மூக்கு, மனம் (உணர்ச்சி, பார்வை, கேட்டல், உருசித்தல், நுகருதல், சிந்தித்தல்)— உண்டு.]

## 91

அழகிய சரிதையுடையவளே! உன் மாளிகையில் நடைபழகும் அன்னப் பற வைகள், நின் அழகு நடையைப் பார்த்து, தாமும் உன்னைப் போல் கால்களை வைத்து நடக்க வேண்டுமென எண்ணி, நீ நடக் கும் போது உன்னைப் பின்பற்றி தடுமாறி நடந்து பழகுகின்றன. அப்போது உன் பாதச் சிலம்புகளின் மணிகளின் ஓசை அப்பறவைகளுக்கு நடக்கப் பயிற்சியளிப் பது போல் தோன்றுகிறது.

[இச் செய்யுளில் தேவியின் நடையழகு, நடையழகிற்கு எடுத்துக்காட்டாகக் கற் றோரால் கையாளப்படும் உவமையான அன்ன நடையையே வென்று விட்டதாகக் கூறப்படுகிறது. 42-வது செய்யுள் முதல் இச் செய்யுள் முடிய அம்பிகையின் மகுடம் முதல் கால், நகங்கள், நடை முடியத் துதிக் கப்பட்டுள்ளன.]

## 92

உலகங்களையே படைத்து, காத்து, அழிக்கும் ப்ரம்ஹா, விஷ்ணு, ருத்ரன், ஈசானன் உனது மஞ்சத்தின் கால்களாக விளங்குகின்றனர். அம் மஞ்சத்தின் மேல் விரிப்பான ஸதாசிவன், வெண்ணிறக் காந்தியோடிருப்பினும், நின் சிவப்பான ஒளிக்கதிர்கள் அவர் மீது வீசவே அவரு டைய காந்தியும் சிவப்பாக மாறி, காம ரஸமே உருவாகியது போல் தெரிவதால் உன் விழிகளுக்கு மகிழ்ச்சியைத் தருகிறார்.

[இங்கு முதல், அம்பாளின் பொது வான சிறப்புகள் குறிக்கத் துவங்கப்படு கிறது. இப்பாவில் அம்பிகையின் கட்டில், மேல்விரிப்பும், அமைப்பும் சொல்லப்படு கிறது. செய்யுளின் பிற்பகுதியில் உயர்ந்த தத்வமான, ஸதாசிவனும் பராசக்தியும் இரண்டறக் கலந்து சிவசக்தி ஐக்கியமான ஸாதாக்ய தத்வம் குறிப்பிடப்படுகிறது.]

## 93

கூந்தலில் மாத்திரம் சுருட்டையாகவும், புன்னகையில் இயற்கையான அழகுடனும்,

மனதில் வாகைப்பூவைப் போல் மிருது வாயும், மார்பகத்தில் கடினமாயும், இடுப் பில் மிகவும் மெலிந்தும், மார்பகப்பகுதி யிலும் இடுப்பின் பக்கவாட்டுப் பிரதேசங் களிலும் பருத்தும், உடல் முழுதும் சிவந் தும், சொல்ல முடியாத அழகுடைய பரம சிவனின் யாதோ ஓர் -உருவம் உலகங் களைக் காக்க மிக மேலானதாக விளங்கு கிறது.

[இப்பாவில் மாறுபட்ட குணங்களைக் கொண்டு, கருணையுருவாக, வர்ணிக்க முடியாத மேன்மையுடன் உலகம் உய்யும் வண்ணம் தேவீ ப்ரகாசிப்பதாகக் கூறப் பட்டுள்ளது.]

94

வானில் தெரியும் சந்த்ர மண்டலம் களங்கமாகிற கஸ்தூரி, வெண்மையான பன்னீர், கலைகளாகிற பச்சைக் கற்பூரப் பொடி ஆகியவை நிரம்பிய மரகதக் கற்க ளாலான சிமிழாக இருக்கிறது. இதி லுள்ள வாஸனைப் பொருள்களை அன்றாடம் குளிக்கும் போது நீ உபயோகிப்பதால் அவை குறையக் குறையக், ப்ரம்ஹா அப் பொருள்களைக் கொண்டு இந்தச் சிமிழை நிரப்பி வைக்கிறார்.

[இச்செய்யுளில் அம்பிகையின் ஸ்நானத்திரவியங்கள் குறிக்கப்படுவது- டன் சந்த்ரனின் வளர்பிறை தேய்பிறை இவைகளும் வர்ணிக்கப் படுகின்றன.]

95

நீ முப்புரங்களை யெரித்த பரமசிவனு- டைய பத்னியாக இருப்பதால், நிலையிலா புத்தியுள்ளவர்களுக்கு, நின் திருவடிகளில் பூஜைசெய்யக் கிடைப்பதில்லை. ஆகவே இந்த்ரன் முதலிய தேவர்களும் உன்னு- டைய மாளிகையின் வாயிலருகே, அங்கு காவல் புரியும் அணிமா முதலிய ஸித்தி தேவதைகளுடன் ஸமமாக நின்று ஸேவிக்- கும் படி நேரிடுகிறது.

[இங்கு அம்பாளை யாராதிக்க திடச்- சித்தம் தேவை யென்றும், அவளுடைய திருவடியின் வழிபாடு எளிதில் கிட்டக் கூடியதல்லவென்றும் குறிப்பிடப்படுகிறது. அணிமா முதலிய ஸித்தி தேவதைகள் தேவியின் சிந்தாமணி மாளிகையின் ஒன்பதாவது வாயிலில் காவல் புரிவதாகச் சொல்லப்படும்.]

96

உத்தம பதிவ்ரதயே! நான்முகன் மனையாளான கலைமகளை எத்துணை கவிகள் அடையவில்லை? எவ்வளவு பேர்கள் செல்வம் படைத்திருப்பதால் திருமகளுக்கு நாதனாகவில்லை? கற்புக் கரசிகளுள் தலையாயுள்ள உன்னை அவ்- வாறு சொல்ல முடியாது. உன்னைத்- தழுவும் உரிமை உன் கணவனான மஹா தேவருக்குத்தவிர வேறு எவருக்கும், ஏன் மருதாணிமரத்திற்குக் கூடக் கிடையாது.

[இப்பாவில் தேவியின் கற்புச் சிறப்பு கூறப்படுகிறது. உலகில் நாவன்மை படைத்தவர்களை கலைமகளின் பதியாகவும், மிகச்செல்வம் படைத்தவர்களைத் திருமக- ளின் பதியாகவும் அழைப்பது வழக்கு. ஆனால் இத்தகைய வழக்கு அம்பாளின் விஷயத்தில் கிடையாது. முன்னர் அசோக மரம் மேம்பட்ட ஸ்த்ரீகளின் உதையால் பூக்குமென்று சொல்லப்பட்டது. இங்கு மருதாணிமரத்தை எடுத்து கொண்டி- ருப்பதற்குக் காரணம் அம்மரம் உத்தம ஸ்த்ரீகளால் தழுவப்பட்டாலேயே பூக்கு மென்று உலகியலில் ஒரு கூற்றிருப்பதால் தான். அம்பிகையை இங்கு ஆசார்யாள் 'ஸதி' என்று அழைத்துள்ளார். 'ஸதீ' என்றால் உத்தம பதிவ்ரதையைக்குறிக்கும். தக்ஷனின் மகளாக அம்பாள் அவதரித்- தாள். பரமசிவனை மணம் புரிந்தாள். பின் னர் ஒருக்கால் தன் தகப்பனால், தன்னு- டைய கணவன் அவமதிக்கப்பட்டதைத்- தாங்க மாட்டாது, அந்த தாக்ஷாயணி தீயில் தன்னுடலை அர்பணித்துக் கொண்- டதை மனதில் வைத்தே 'ஸதி' என்ற சொல் இச்செய்யுளில் உபயோகப்படுத்- தப்பட்டிருக்க வேண்டும்.]

97

ஸதாசிவனின் பட்டமஹிஷியே! வேதத்தின் நுணுக்கங்களையறிந்தவர்கள்

உன்னை கலைமகளென்றும், திருமகளென்றும், மலைமகளென்றும் சொல்வர். ஆனால் நீயோ இவர்களல்லாத நான்காவதாக, தனிப்பட்ட உருவுடனும், யாதெனக் கூறமுடியாத ஒன்றாகவும், அடையமுடியாததாகவும், வரம்பற்ற பெருமையோடு கூடியதாகவும் மஹாமாயா என்றவளாக எல்லாவுலகுகளையும் மோஹிக்கவும் சுழலவும் செய்கிறாய்.

[இங்கு அம்பாள் இடம், காலம், பரிமாணம் ஆகியவற்றிற்கெல்லாம் அப்பாற்பட்டவளென்று சொல்லப்படுகிறது. அதோடு ஸகலப்ரபஞ்சத்தையும் தன் வசமாக்கியவளென்றும் குறிப்பிடப்படுகிறது.]

## 98

தாயே! பிறவி ஊமைகளும் கூட கலைமகளின் தாம்பூலரஸத்தைப் பருகுவதால் கவித்திறனை யடைகிறார்கள். அதற்கு ஈடான சக்தியுடையது நின் திருவடிகளை கழுவிய ஜலமாகும். அந்த ஜலம் உன் காலில் பூசப்பட்டிருக்கும் சிவப்பு வர்ணக் குழம்புடன் சேர்ந்து சிவப்பு நிறத்தை யடைகிறது. அத்தகைய நின் திருவடிக் கழுநீர் ஆத்மஞானத்தையடைய விரும்பும் எனக்கு எப்போது கிட்டுமோ!

[இச் செய்யுள் தேவியின் சரணங்களைக் கழுவிய நீரின் சக்தியை வெளிப்படுத்துகிறது. ஸமயமதத்தின் கொள்கையைக் கொண்டதாம் இந்த சரண நிர்மால்ய அருள்.]

## 99

உன்னை ஸேவிப்பவனிடத்தில் கல்வியும் செல்வமும் மிகுந்து காணப்படுமாகையால், கலைமகளின் கணவனான ப்ரம்ஹாவும், திருமகளின் பதியான விஷ்ணுவும், அந்த உன் பக்தனிடத்தில் பொறாமைப் படக் கூடும். மன்மதனின் மனைவியான ரதியும் கூடப் பார்த்து மனோவிகாரமடையக்கூடிய அழகான உருவுடன் அந்த உன் பக்தன், நீடூழி காலம் ஜீவன், மாயை இவைகளின் தொடர்பிலிருந்து விடுபட்டவனாய் பரமானந்தத்தை அனுபவிக்கிறான்.

[இப்பாவில் அம்பிகையை உபாஸிப்பதால் இவ்வுலகிலுள்ள எல்லாவிதமான ஸுகங்களை அனுபவிப்பதுடன் சுகர், வாமதேவர், மார்க்கண்டேயர் முதலிய ஜீவன்முக்தர்களைப் போல் மாயை நீங்கி, ப்ரம்ஹானந்தஸுகத்தையும் இங்கேயே அனுபவிக்கலாமென்று சுட்டிக் காட்டப்படுகிறது. தேவி அழியக் கூடிய போகங்களையும், அழியாத மோக்ஷஸுகத்தையும் பக்தனின் ஆயுட்காலத்திலேயே அளிக்கிறாளெனத் தெளிவுபடுகிறது.]

## 100

சொற்களுக்கெல்லாம் பிறப்பிடமாகிய தாயே! நீ அளித்த பிச்சையான சொற்களால் இயற்றப்பட்ட இப்பாமாலையால் உன்னை யான் துதிப்பது, தீவட்டியின் ஒளிகொண்டு கதிரவனுக்குக் கற்பூரம் காட்டுவதுபோலும், அமுதத்தை பொழியும் கதிர்களையுடைய வெண்மதிக்கு, சந்த்ரகாந்தக் கல்லில் சுரக்கும் தண்ணீரைக்கொண்டு, அவனது கையில் மலர், பழம் முதலிய பொருள்களைச் சேர்த்து நீர் வார்த்து மரியாதை செய்வது போலும், நீர்நிலையாகிய கடலரசனுக்கு அவனுடைய தேயான தண்ணீரைக்கொண்டு நீர்க்கடன் தருவது போலவும் இருக்கிறது.

[இக்கடைப்பாவில் சங்கரர் இப்பாமாலையைத் தானியற்றியது தேவியின் அருளாலேயன்றி வேறில்லையென்கிறார். அவருடைய அவயடக்கமும் இதில் காணப்படுகிறது. மந்த்ரசாஸ்த்ர நுணுக்கங்களும், ஒப்பற்ற உவமைகளும், வாக்கு நயமும், பொருள் நிறைவும், தத்வநிருபணங்களும், உயர்ந்த குறிக்கோளும், நிரம்பி வழியும் இந்த அழகலைகளான ஸௌந்தர்யலஹரீ எனும் பாமாலையை அம்பாளுக்குச் சாற்றி, முடிக்கும் போது ஸ்ரீசங்கர பகவத்பாதர் தன்னுடைய அகம் பாவமற்ற தன்மையை இப்பாவினால் வெளிப்படுத்தியுள்ளார். இங்கு பொருத்தமான உவமைகள் காணப்படுகின்றன. மேலும் ''உன்னுடைய வாக்குகளினால் இயற்றபட்ட'' என்று அம்பிகையை நோக்கிச்சொல்வதால், ஆசார்யாளின் அத்வைத மனோநிலையும் தெளிவுபடுகிறது.]

உ

வீரை

கவிராஜபண்டிதரியற்றிய

# ஆனந்தலஹரீ, ஸௌந்தர்யலஹரீ.

## பாயிரம்

### விநாயகர் வணக்கம்.

1 மொழிந்தமறை நூலியற்று முகபடா மணிந்துமுது ஞான தானம்
பொழிந்துதன் திணைமணியென் றிருசுடரும் புனைகளிற்றைப் போற்றல் செய்வாம்
வழிந்துபெரும் புனல்பரந்து வடவரையிற் றுலகேழு மேழு மொக்க
அழிந்திடினும் அழியாத அபிராமி பாடல்வளம் அளிக்க என்றே.

### இந்நூல் செய்தற்குக் காரணம்

2 இத்தனைநாள் நீயிருக்க வாயிருக்க இயலிருக்க அருள்பா டாமல்
மத்தனையா ளுங்கொடியை இப்போதென் வழுத்துகின்ற வாறென் பீரேற்
பித்தனையா ரேவல்கொள்வார் பித்தொழிந்தா லுரியவர்கள் அடிமை யோலைக்
கொத்தனையா ரேவல்கொள்ளார் கொள்ளும்போ தெவனுலே குழப்ப லாமே.

### அவையடக்கம்

3 யாமளைதன் பெரும்புகழை யாதிமறை நாலின்வடித் தெடுத்த நூலை
நாமகள் தன் பாடலிதென் றரனுர்க்கு நவில அவர் நகைசெய் தன்றே
பாமகளை யருகழைத்துப் பருப்பதத்திற் பொறித்திருந்த பரிசு காட்டுஞ்
சேமநிதிப் பாடலையென் புன்கவியாற் கொள்வதவள் திறமை யன்றே.

### முன் இந்நூலை வடமொழியிற் செய்தவரை வியத்தல்

4 அரன்கயிலைப் புறத்தெழுதப் படுநூலை அருந்தவத்துப் புட்பதந்தன்
பரந்தவட வரையழுத்த அதைக்கவுட பாதருளம் பதித்து முற்றுந்
தரம்பெறுசொல் லமுதௌப்பின் சங்கரமா முனிக்கருள அந்த மேகஞ்
சுரந்துலகில் வாடுமுயிர்ப் பயிர்தழைப்பச் சொரிந்ததெனச் சொல்வர் நல்லோர்.

### இந்நூலைத் தமிழ்செய்தவர் பெயர்

5 இன்ன தன்மைய நூலி னைக்கவி ராச ராசவ ரோதய
மன்னன் நம்பிர மாத ராயன் வடித்த ரும்பொருள் கூறவே
கன்ன லஞ்சிலை வேளெ னுங்கவி ராச பண்டிதன் வீரையான்
சொல்ந யம்பெறு காவியக்கவி சொல்வ லென்றுதொ டங்குவான்.

### தேவி சரித்திறத் திரம்

6 வடமொழி எனும்பழைய விரிகடல்பி றந்திறைவர் மனையிடையி ருந்து சிலைமேல்
இடமொடுத வழ்ந்துதன திடுபெயர்ச வுந்தரிய லகரியென நின்று வளர்மாது
அடலரசு முன்பினுள பலமதப்ர பந்தமெனும் அடுபகைது ரந்தென் மணிநா
நடமிடுபெ ருங்கவிதை மதகரியொ டும்புவியை நகரிவலம் வந்த திதுவே.

பாயிர முற்றிற்று.

# ஆனந்தலஹரீ.

## சக்தியையன்றிச் சிவத்துக்கோர் செயலில்லை

1 சிவமெ னும்பொருளும் ஆதி சத்தியொடு சேரி னெத்தொழிலும் வல்லதாம்
இவள்பி ரிந்திடின் இயங்கு தற்குமரி தரிதெ னுமறை யிரைக்குமால்
நவபெ ரும்புவன மெவ்வ கைத்தொழில் நடத்தி யாவரும்வ ழுத்துதாள்
அவனி யின்கணொரு தவமி லார்பணிய லாவதோ பரவ லாவதோ.

## தேவி பாததூளியே முத்தொழிற்குங் காரணம்

2 பாத தாமரையி னுண்டு கள்பரம அணுவி னிற்பலவி யற்றினால்
வேத நான்முகன் விதிக்க வேறுபடு விரித லைப்புவனம் அடையமால்
மூத ராவடிவெ டுத்த னந்தமுது கணப ணுடவி பரிப்பமேல்
நாத னூர்பொடி படுத்து நீறணியின் நாமு ரைத்தெனவள் பான்மையே.

## எல்லா நன்மைக்கும் தேவியே காரணம்

3 அறிவி லர்கிதய திமிர மீருமள வற்ற ஆதவ ரளப்பிலா
எறிக திர்ப்ரபை குழைத்தி ழைத்தனைய தீவி யாமளை நி னைப்பிலார்
செறிம திக்கிணரி னெழுகு தேனருவி தெறுக லிக்கருள்ம ணிக்குழாம்
பிறவி மைக்கடல்வி ழாதெ டுப்பதொரு பெருவ ராகவெண்ம ருப்பரோ.

## தேவி பாதமே யாவையுங் கொடுக்கும்

4 தேவ னப்புகழ அதில்நி மிர்ந்துநிகர் செப்பு வாரபய வரதமாம்
பாவ கத்தபிந யத்தொ டுற்றகை பரப்பி யென்பய மொறுக்குமே
யாவ ருக்குமஃ தரிது நின்பதம் இரப்ப யாவையும் அளிக்குமால்
மூவ ருக்குமொரு தாவ ரப்பொருளென் மூல மேதழையு ஞாலமே.

## தேவியை வந்தித்தோர் பெறுபயன்

5 மாயன் வணங்கியுன் மால்வடி வங்கொள வாடும் அரன் துயர் போதாதோ
தூயம தன்தொழ ஆண்வடி வம்புணர் தோகைகண் வண்டியி றேனேபோல்
மேயவ ழங்குமு ரூபம தென்சொல மேலிது கண்டவர் வாழ்வாரோ
நீயதி ரஞ்சகி மோகன வஞ்சகி நீசெய்வ தொன்றல மாதாவே.

## தேவி யருளின் செய்கை

6 தொடுக ரச்சிலைதொ டப்பொ ருமலர் சுருப்பு நாணிடுவ தைந்துகோல்
அடுப டைத்தலைவ னூர்வ சந்தமலை தென்றல் தேருருவம் அருவமா
முடுகு கொற்றமத னொருவ னிப்புவன முற்றும் வெற்றிகொள முடிவிலா
நெடும லர்க்கணருள் சிறித ளித்தனைகொல் நீலி யேகரக பாலியே.

## தேவியை என்முன் வந்தருளெனல்

7 மேகலை பொங்கம தாசல கும்பமெ னுமுலை கண்டிடை சோராநீர்
மாகவ ளங்கெழு நாள்நிறை யம்புலி வாண்முக மம்புவில் ஏடார்போ
தேகநெ டுங்கழை பாசமொ டங்குசம் ஏர்பெற வந்தருள் காபாலி
நீகம லந்திகழ் தாள்வரு டென்றரன் நீர்மையின் விஞ்சிய கோமாதே.

## தேவி யோகநித்திரை கொள்ளுந் தானம்

8 ஆரமு தின்கடல் வேலிசெ ழுந்தரு வாய்மணி பம்பிய தீவூடே
பரரக டம்படர் கானில ருங்கொடை பாய்மணி மண்டப வீடுடே
கோரசி வன்பர மேசனுன் மஞ்சமொர் கூர்பரி யங்கமெ னுமேலே
சீரட ரும்பர ஞானமு றுங்களி தேவர ருந்துவர் பூமாதே.

## குண்டலிசக்தி தன்னிடம் விட்டுச் செல்லுமாறு

9 மூலமணி பூரகத்தோ டிலிங்க மார்பு முதுகளம்விற் புருவநடு மொழிவ தாறு
ஞாலமுமென் புனலும் அனற் பிழம்புங் காலும் நாதமுறு பெருவெளியு மனமு மாக
மேலணுகிக் குளபதத்தைப் பின்னிட் டப்பால் மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்து
ஆலவிடம் பருகியதன் மகிழ்ந ரோடும் ஆனந்த முறும்பொறுளை யறிய லாமே.

## குண்டலிசத்தி தன்னிடத்தை மீண்டடையுமாறு

10 தாளிணைக் கமல மூறித் தருமமிழ் துடல மூழ்க மீள அப் பதங்கள் யாவும் விட்டுமுற் பழைய மூலம்
வாளர வென்ன ஆகம் வளைத்துயர் பணத்தினேடு நாளுமைக் கயற்கண் துஞ்சு ஞானவா னந்த மின்னே.

## தேவி இருக்குஞ் சக்கரம்

11 சிவகோண முற்பகர்வ தொருநாலு சத்திநெறி செறிகோண மத்தொடரு மருவுகோள்
நவகோண முட்படுவ தெழுமூவி ரட்டியொரு நவில்கோண முற்றதுவும் வலயமாய்
இவராநி ரைத்ததள மிருநாலு மெட்டிணையும் எழிலாய வட்டமொடு சதுரமாய்
உவமான மற்றதனி தனிமூவ கைக்கணுமென் உமைபாத முற்றசிறு வரைகளே.

## தேவியினது திருவழகை வியத்தல்

12 ஆதி சுந்தரி வடிவினை அயன்முதற் புலவோர் ஏது கண்டள விடுவது தமையிகழ் இமையோர்
மாத ரிங்கிவள் மகிழ்நரோ டுறைகுவ மெனினோர் பேதை கொங்கைகள் பெருகுவ மெனமறு குவரால்.

## தேவியினது கருணையை வியத்தல்

13 அறக்கிழவன் மனிதன்விர கில்லாக் கொச்சை அழகிருந்த ஊரிலிருந் தரியானேனும்
உறக்கருணை கொழிக்குமுன தமுத வாரி ஊடணுகி னவனை அர மகளி ரெல்லாம்
நறைக்குழலுஞ் சரிந்திடஉத் தரீயஞ் சோர நாணழிய வளைசிதற உடுத்த ஆடை
புறத்துவிழ மயலொடும்பின் தொடர்வ ரென்றுற் பொற்கொடிநின் புதுமை-யெவர் புகழ வல்லார்.

## தேவிபாதம் ஷடாதாரகிரணங்களின்மே லிருக்குமெனல்

14 பணிபார் புனற்கனலி வளிவான் மனத்திலறு பதின்நா லொழித்ததுமுன் னடைவிலே
இணைநா லொழித்தது இரு கதிரேற உற்றதுமூ இணைபோயது எட்டினொடு கதிர்கள்நா
லணையாநி ரைத்ததுஉறு கதிர்நா லடுத்ததுதன் அளவாயி லக்கமறு வகையினுல்
உணரா உரைத்தகதிர் களின்மே லிருக்குமென துமைபாத செக்கர்விரி கமலமே.

## மதுர கவிபாட வேண்டினோர் தியானிக்குமியல்பு

15 உனதுசரற் காலமதி யனைய மெய்யும் உடல்குழைத்த பிறைச்சடையுங் கரங்கள் நான்கும்
அனவரத முறுமபய வரத ஞான அருட்பளிங்கு வடமொடுபுத் தகமு மாக
நினைகிலர்முன் வழுத்திலர்பின் வணங்கா ரெங்ஙன் நிறைத்தபசுந் தேனும் அடு பாலுந் தூய
கனியுமென மதுரம்விளைந் தொழுகு பாடற் கவிதைபொழி வதுகயிலைக் கடவுள் வாழ்வே.

## இன்பக்கவிதை பாடவேண்டினோர் தியானிக்குமுறை

16 வாரின்ப முலைமலை மடந்தைகவி நாவலர் மனக்கமல வனமலரநீள்
தேரின்ப இளவெயில் தழைக்கும்ப்ர பைச்சைய்ய செவ்விநிற முணரும் உரவோர்
தாரின்ப நறவொழுகு சுருளோதி இருள்விரவு தவளநிற வாணிகலைதேர்
பேரின்ப மதுரவலை எறியமுத கவிதைகொடு பேருலகை மகிழ்விப்பரே.

## காவியம் செய்ய வேண்டினோர் தியானிக்குமியல்பு

17 இந்துசிலை யைப்பிளந் துண்ணிறம் வகுத்தனைய எழில்வசனி யாதி மடவார்
அந்தஇணை நால்வர்புடை சூழமலை மங்கைதனது அருணவடி வுணர அறிவோர்
கொந்தவிழ விரிதவள மலர்மங்கை முககமல கோலபரி மளக விதையாற்
செந்தமிழின் வடகலையின் முதுமொழிக் காவியத் தெளிபாடல் செய்யு மவரே.

## மகளிர் வசியம் வேண்டினோர் தியானிக்குமியல்பு

18 உனதுநிற மெனுமிளைய கதிரிரவி வெயில்முழுகும் உலகடைய வெனநினைகுவோர்
வினைகெழுமு கொலைமறலி அனையவிழி உருவசிமுன் விரவுமர மகளிர் விழைவோர்
அனவரத மெனதமுது பொழிகவியும் உனதருளும் எனதுடலும் உயிரும் உயிர்சூழ்
மனமுமதி லுணர்வும்வரு களியுமென நினைவுருக மலையரைய னுதவு மயிலே.

## மோகிப்பிக்க வேண்டினோர் தியானிக்குமியல்பு

19 ஆதி விந்துவை முகமென இணைமுலை கீழி ரண்டதன் வடிவென அருகுதாழ்
கோத றுஞ்சுட ரெழஅழ கொழுகுத்ரி கோண மொன்றென உனதெழி லிரதிதோய்
காத லன்கலை தமதிட நினைபவர் காணு மங்கையர் கலைகொள லரியதோ
ஓதி லிங்கிரு சுடர்முலை யனையவு லோக மங்கையை மயல்செய்வர் கமலையே.

## விஷமுஞ்சுரமுந் தீர்க்கவேண்டினோர் தியானிக்குமியல்பு

20 ஆட லம்பிகை இமகர சிலைவடி வாளு நெஞ்சினுள் வழிவுறு கிரணமேல்
ஓடி யெங்கணும் உடல்பெரு கமிழ்தென ஊடெ ழும்ப்ரபை தமதிடம் உணர்குவோர்
நாடவுங்கொடு விடமொரு கலுழனை நாடும் வெங்கொலை அரவென முறியுமேல்
மூட ருஞ்சுரம் வீழிபொழி அமுதினின் மூழ்க என்பொடும் அழலுடல் குளிருமே.

## சமாதியும் நிட்டையு முடையோர் தரிசிக்கு மியல்பு

21 ஆன மின்கொடி போலுமென் முண்டகம் ஆறின் மண்டல மூவகை யின்கணோர்
பானு அம்புலி தீயின் நிறங்கிளர் பான்மை கொண்டித ழாயிர கஞ்சநீள்
கானி லுன்களி ஞான முறுங்கலை காழ்ம லங்களின் மூவகை போன்றியே
போன சிந்தையின் மாயை யொழிந்தவர் போத மின்புறு மாதியொ டந்தமே.

## தேவி விரைந்து வரங்கொடுத்தல்

22 பேரு றுங்கயி லாசன்ம கன்பெறு பேர னன்புறு பேரனெ னுஞ்சொலால்
வாரம் அன்பொடு பார்வை வழங்கென வாய்தி றந்திட ஒடிவ ழங்கிநுய்
வேரி முண்டகன் மான்மகு டங்களின் வீச ரும்ப்ரபை தீபம்உ வந்ததாள்
சேரு நன்பெரு வாழ்வும்வ ழங்குவை தேட ருஞ்சிவ மாயம தங்கியே.

## அர்த்தபாகமா யிராத தேவியைச் சிறப்பித்தல்

23 ஆதி சங்கரர் பாதியு டம்பினி தாளு மம்பிகை பாதியும் விஞ்சுமோ
நீதி யன்றென நாயகர் பங்கையு நீகவர்ந்தனை யாலவ ரெங்குளார்
சோதி செங்கதிர் மேனிநி றைந்தது தூய கண்களு மூவகை கொங்கையோ
ஈதி ரண்டுஉடல் கூனுமி ளம்பிறை ஏர்பொ ழிந்தது நீண்முடி யெங்குமே.

## தேவி புருவத்தால் ஏவுதலை வியத்தல்

24 ஆதி முண்டகன் மால்சிவ னண்டர்ம கேச னந்தச தாசிவ னைந்துபேர்
மேத குந்தொழில் போலவ னைந்தருள் வீறும் அங்கு அதன் ஊறலு முண்டென
யாது மின்றியு மேனியொ டெங்கணு மாயை தந்தது ஞானமிரங்குமோர்
நீதி யுந்திரு வேபுரு வங்கொடு நீசொ லிங்கித ஏவல்பு ரிந்ததே.

## தேவி பாத பூசை மகிமை

25 மூவ ருக்குமு தற்பி றப்புநின் முக்கு ணக்கட லென்றுமுன்
சேவ டிக்கணி ருப்பர் சென்னிகு வித்த செங்கைபி ரிக்கிலார்
பூஎ டுத்தவர் சென்னி வைத்திடு போத முற்றவர் அம்மைநின்
காஅ லர்ப்பொதி தாளில் வைக்கவு மூவர் சென்னிக ளிக்குமே.

## தேவி மங்கலநாண் சிறப்பு

26 வேத ரஞ்சகன் மால்பு ரந்தரன் வேக சண்டகு பேரனோடு
ஆதி எண்திசை பாலர் பொன்றவும் ஆதி யந்தமி லாததோர்
நாதர் பொன்றில ரேதுன் மங்கல நாணு றுந்திற மாதலால்
நீத ழைந்தது யோக மம்பிகை நீலி யென்பது பாவமே.

## என்னை அளித்தல் வேண்டுமெனல்

27 மொழிவ துன்செபம் முத்திரை பாணியின் முயல்வ தெங்கு நடப்பன கோயில்சூழ்
தொழில்அ ருந்துவ முற்றும்உன் ஆகுதி துயில்வ ணங்கல்க ளிப்பன யாவுநீ
ஒழிவ றுங்களி என்செயல் யாவையும் உனது நன்சப ரிச்செய லாகவே
அழிவ றும்பதம் வைத்தருள் பேரொளி அளிவி ளைந்துக ளிப்பெழு நாதமே.

## தேவியினது தோட்டின் சிறப்பு

28 பிரம னிந்திரன் முற்பிற தேவர்க ளுணெலாம் நரைபெ ருந்திரை யற்றநல் லாரமு தேகொலாம்
ஒருவர் தங்கிலர் நின்சிவ னூண்விடம் வாழ்வன்மாது இருபெ ருங்குழை யிட்டபொன் ஞேலையின் வாசியே.

## ஏவலாளர் மங்கல மொழி

29 முதுமறைசொ லிளவனிதை அயனெடரி குலிசனுனை முறைபணியு நெறியி னிடையே
பதறியுன தருகுவரும் அரனையெதிர் கொளஉனது பரிசனமு னடிவ ளமையால்
இதுபிரமன் மகுடம் அரி மகுடமிது குலிசன்முடி இதுகடினம் இடறும் இருதாள்
சதிஅமர அமரவழி விலகிவர வரஎமது கடவுளெனு மொழித ழைகவே.

## தியானிப்போர் அடையுந் தன்மை,

30 அம்மேநின் மெய்ப்பிரிவாம் அணிமாதி தொழுமழியா இம்மேனி தம்மேனி யெனத்தெளிந்து பாவிப்பார்
செம்மேனி அரன்வாழ்வுஞ் சிதைவதெனப் புறக்கணித்து வெம்மேனி ஊழியனல் தீபமிட விளங்குவார்.

## தேவி வித்தை வந்தவாறு

31 பசுபதிதன் நீதிகொண் டறுபத்து நாலுபல கலைஞான முங்க ருணையால்
வசிவற நெடும்புவன மாயையின் மயக்கியதன் வழிவரு பெரும்ப யனெலாம்
இசைபெற விளைத்ததுவும் பின்னுமுன தேவலால் இணையிலுன தாக மமெலாம்
விசைபெற விளைத்தெவையும் இதுதர அளித்ததுவும் விமலையுன துரிமை யலவோ.

## தேவியினது மூல மந்திரம்

32 அரியதா குஞ்சிவம் சத்திமதன் அவனிபின்பு ஆதித்தன் மதிம தனவேள்
பெருகுவான் இந்திரன் பின்புபரை மதனன்மால் பேசின்முக் கண்ட மடைவே
உரியதாம் அந்தத்தின் மாயையும் முறையமைத் துறுமெழுத் தடைய உணர்வால்
தெரியினு மத்தினெடு முனதுறுப் பாமென்று செப்புநான் மறைகள் உமையே.

## அம்மந்திரத்துட னெழுத்துக்கள் கூட்டிச் செபிக்கு முறைமை

33 மோக போக விழைவி னர்உன் மூல வித்தை தன்னின்முன்
னுக மாரன் யோனி பொன்ன ணங்க மைத்து நெய்யினல்
யோக மார்சி வத்த ழற்குள் ஓம முற்று விமலையே
தியாக மாம ணிக்கொ டக்க வலய முட்செ விப்பரே.

## சத்திவடிவுஞ் சிவன்வடிவும் ஒன்றெனல்

34 இருசுடர் மூலத்துணைச் சிவன்வடிவு நீயதனை யானும்நவ மாக நினைவேன்
உருவுநிறை தன்னிலள வொத்தபர மானந்தம் உடையபர ஞேடுப ரையுமாய்
மருவுமினி தாமுங்கள் கூட்டமது சேடமு மறுத்ததனை யுடைய துவுமாய்
அருகிலிரு வர்க்குமொரு பொதுவாகி நிற்குங்கொல் அழிவற்ற ஞான முதலே.

## இது அதன்கருத்தை வெளிப்படுத்தல்

35 மனமுநீ வெளியுநீ வளியுநீ கனலுநீ மறிபுனலு நீபு வியுநீ
நினையிநீ பரமற வளர்ந்தொளி பரந்துவிடின் நீயன்றி யொன்று முளதோ
உனதுமா ஞானவா னந்தவுரு வைப்புவன உருவென வகுத்த ருளவோ
அனையுமாய் மகவுமா மாறுபோல் நீசத்தி அருணவடி வாய துமையே.

## ஆக்கினைச் சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

36 அருளுமுன தாக்கினைத் திகிரிக்கு ளுட்பட்டு அருக்கன்மதி யனைய வடிவாய்ப்
பருவமுதிர் பரசின் மயத்தொடுறு பான்மையாம் பரமசிவ னைப்ப ணிகுவாம்
ஒருபொழுதி லிப்பரம சிவனையெழு கதிர்மதிய ஒளிகடந் தொளிரு மொருபாற்
பெருகுபர மானந்த விழைவொளி நினைப்பதுகொல் பெறுமுத்தி சத்தி யொளியே.

## விசுத்திச் சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

37 இறைவிநின் விசுத்தித் தலத்திடை பளிங்குநிற எழிலொடுல கருடந் தையாய்
உறையுமொரு சிவனையு மவன்போலு மாரம்பம் உடையவுனை யும்ப ணிகுவாகும்
நிறைமதி யொளிக்கொத்த நெறியேகு முமதொளியின் நிலவுண்டு பசி களைவதோர்
முறைபெறுச கோரமென வுலகுபா தகவிருள் முடித்துக் களித்து றையுமே.

## அனுகத சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

38 முன்னைத் தபோதனர்த மிதயமா னதவாவி முதுஞான முளரி நறவார்ந்து
அன்னத்தின் வடமொழிப் பெயர்பெற்று மொழிபயிலும் அறுமூன்று விஞ்சை விரிவாற்
பன்னப் பொதிந்ததீ வினைநீரில் நற்குணப் பால்பிரித் துண்டு களியா
மன்னப் படுஞ்சிறைப் புள்ளிணையை நாடொறும் வழுத்துது மலர்க்க மலையே.

## மணிபூரக சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

39 நிலைபெறு சுவாதிட் டான நின்சிவ அனலு நீயும்
இலகிய தன்மை நெஞ்சத் திறைஞ்சுவம் உரைக்க மாட்டேம்
உலகமப் பார்வை செந்தீக் குருகில்நின் கருணை பொங்கி
அலையெறி யமுதப் பார்வை அளித்தினி தருளு மம்மே.

### சுவாதிட்டான சக்கரத்திலே தரிசிக்குமியல்பு

40 விரிந்தவிருள் விழுங்குசக்தி மின்னெடும்பன் மணியிந்த்ர வில்லி னேடுந்
தரித்தமறை பரவுசிவ தபனகதிர் எறிப்பவதிற் றழன்று தீயிற்
புரித்துலகங் குளிரவொளி தழைத்தொளிரப் பொழியமுத தாரை மாரி
பரித்தமணி பூரகத்துன் பச்சைமுகில் பணிவனருள் பழுத்த கொம்பே.

### மூலாதார சக்கரத்திலே தரிசிக்கு மியல்பு

41. நீநந்து மூலவா தாரத்தி லானந்த நிர்த்தமிடு மிறைவி நின்னேடு
ஆனந்த தாண்டவம் விளைத்துநவ வடிவுபெறும் ஆதிசிவ னைப்ப ரவுவாம்
வானந்தொ டுத்துலக மடையப் படைத்திடுமிவ் வகையின் புணர்ச்சி யலவோ
ஞானங்கொ டனைதந்தை யெனவுலகு தெளிவுற நடத்துவது ஞான வொளியே.

ஆனந்தலஹரீ முற்றிற்று.

---

# ஸௌந்தர்ய லஹரீ

### திருக்கூந்தற் புகழ்ச்சி

42 அந்தர மணித்தபனர் பலமணியின் வடிவெடுத் தமருமுன தம்பொன் முடிமேல்
இந்துகலை நவமணியி னெழுகுபல நிறமடைந்து இலகுமநி சயவ டிவினுற்
சந்த்ரகலை நன்றுநன் றென்பர்சிலர் அன்றன்று சந்த்ரகலை இந்த நிறமோ
இந்த்ரசிலை இந்த்ரசிலை யென்பர்சில ராதலால் யாதென வழுத்த உமையே.

43 அலர்ந்தகரு நெய்தலங் காடெனக் கடைகுழன்று அறநெய்த் திருண்டு செறிவோடு
இலங்குறு மியற்கைமணம் எண்திசையளப்பவதில் இதழ்மூழ்கு நறைவிழைவின்றற்
பொலன்கொண்முடி யாகண்ட லேசர்பொற் றுணர்விரி பொதும்பர்மது மலர்ப டிவதோர்
சிலம்பளி பரந்தஉன தோதியென் மனத்திருட் செறிவுதெற அருள்க மலையே.

44 மோதிய வெங்கதிர் மீளவெ ருண்டிருள் மூடஓ துங்கிய வாறேயோ
சோதிமு கங்கவி னேறி வழிந்தன சோரவி டுங்கவர் காலேயோ
ஓதிபி ளைந்து பின்வீழவ கிர்ந்ததன் ஊடெழு தும்ப்ரபை யாதேயோ
கோதறு சிந்துர ரேகைவ எம்பிறர் கூறுவ தன்றிது மாதாவே.

### திருமுகப் புகழ்ச்சி

45 கூரெயிற்றின் அகஇதழுங் கொண்கர்விழி வரிவண்டுங் குழறபடிந்த மதுகரத்தின் குழாமுங் கூடிப்
பேரியற்கை மணம்பொதிந்து புன்மூரல் முகையவிழப் பிறழுமுன தருணமுக கமல மென்றூல்
ஓரியற்கை வாடுமிதழ் பொறிவண்டே படிவதுமற் றேரியற்கை செயற்கைமணம் போது செய்யும்
நீரியற்கை மலர்க்கமல மிதற்குடைந்து பங்கமுறல் நீதியென்ப தியாரறியார் நிகரில் மாதே.

## திருநுதற் புகழ்ச்சி

46 கோதை நீண்முடி கொண்டொளிர் திங்கள்சேர் பாதி வாள்நுத லென்று படிந்ததோ
ஈது கூடி யிரண்டு நிறைந்ததோ சீத பூரணத் திங்கள் சிறந்ததே.

## திருப்புருவப் புகழ்ச்சி

47 கருவிழிச் சுருப்பு நாண்உன் கண்மல ரம்பு கன்னற்
புருவவில் நடுவொ ழித்தல் போன்றது வளைத்துப் போர்மேல்
வருமதன் பிடித்த கைக்குள் மறைந்தது போலு மென்றால்
திருமகள் பரவு மம்மே சிலையிது புருவ மன்றே.

## திருவிழிப் புகழ்ச்சி

48 ஒருமலர்க்கண் இரவிவலத் துதித்தருளு நண்பகலும்
ஒருமலர்க்கண் மதியமிடத் துதித்தருளும் பேரிரவுந்
திருநுதற்கட் பொற்கமலச் செந்நிறத்தீ விளைத்தருளும்
லிரவுசெக்கர் மாலையுமுன் விழைவகலா விழுப்பொருளே.

49 கோலநகர் விசாலையாய் நிரந்தரகல் யாணியாய்க் குவலயத்தா லயோத்தி யாய்க் குலமதுரை தானுய்ச்
சாலஒளிர் போகவதி யாய் அமுத தாரையாய்த் தண்ணளியால் அவந்தியாய்ச் சகவிசையை யெனலாய்
நீலவிழி புடைபரந்து நெடுநகரப் பெயர்கவர்ந்து நீண்டுசேந் தரிபரந்து நிகரொழிக்கு மென்றால்
ஆலவிட மமுதமெனக்கொண் டருந்தியவுன் மத்தர்புரம் அதனிலொரு புறங் கவர்த லதிசயமோ தாயே.

50 இருசெவியுண் பலகவிதை யிணரொழுகு பசுந்தேனிற்
பெருகுநவ ரதமருந்திப் பிறழ்ந்திடுமுன் பிணைவிழியாங்
கருநிறவண் டிணைகளிப்பக் கண்டுபொரு தென்னேயோ
வரிநுதற்கண் அளிசிவந்த வளம்பாராய் மலர்க்கொடியே.

51 அரனிடத்திற் பேரின்ப மருளும் அவ னல்லார்பால் அருவருக்கும் அவன் முடிமே லணிநதியைச் சீறும்
பரவுநுதல்விழி அழல்முன்பார்த்திலபோ லதிசயிக்கும் பணியாய பணிவெகுளப் பயந்தனபோ லொடுங்கும்
விரைமுளரிப் பகைதடிந்து வீராதம் படைக்கும் வினவுதுணைச் சேடியற்கு விருந்துநகை விளைக்கும்
இரவுபக லடிபரவும் எளியனைக்கண் டருள்புரியும் இத்தனையோ படித்தனஉன் இணைவிழிகள் தாயே.

52 இகல்பொரக் குழையை முட்டும் இமைமயி ரொழுங்கிற் றூவல்
நிகரறு நித்தர் யோக நீக்கிவெம் போக நல்கும்
சிகரவெற் பரசன் தொல்லைத் திருமா பென்னுந் தெய்வ
மகுடமா மணிநின் கண்கள் வயமதன் வாளிதானே.

53 வரிவிழிச் செம்மை வெண்மை வனப்புறு கருமை மூன்றும்
எரிதெறு கற்ப காலத் திறந்தமுப் பொருளுந் தோன்றுங்
கருஎனக் குணங்கள் மூன்றின் காரண மென்னப் பெற்றால்
அருமறைப் பொருளே உன்றன் அருளலா துலக முண்டோ.

54 அம்மைநின் கருணை பொங்கி அலையெறி நயன வேலை
மும்மணி கெழுமுண் தெள்ளீர் மும்மலங் களைய மூழ்கச்
செம்மைநன் சோணை யாறு தெளிகங்கை யமுனை மூன்றுந்
தம்மயத் தொடும்வந் துற்ற தன்மையீ தென்பர் மிக்கோர்.

55 இணைவிழி யிமையா நாட்டம் எய்திய தலரத் தோன்றும்
பணைநெடும் புவனம் இந்தப் பார்வைசற் றிமைக்கு மாயில்
துணையிழந் தழிவ தெண்ணித் துணிந்தநின் கருணை யென்றாற்
கணையினுங் கொடிய தென்னக் கடவதோ கடவுண் மாதே.

56 இடம்படர் கொடியே நின்கண் இருசெவிக் குரைப்ப தேதென்று
அடர்ந்தெழு கயலின் கண்கள் அடைப்பில பயப்பட் டம்மா
கடும்பகற் கமல வீடுங் கங்குல்வாய் நெய்தல் வீடும்
அடைந்தனள் கமலை யொன்றொன் றடைப்பன கண்டு கண்டாய்.

57 நெடியகண் கரிய நெய்தல் நிறையருட் சலதி யெய்தாக்
கொடியனேன் பிறவித் துன்பக் குறைகடல் கடந்து மூழ்க
விடினதிற் குறைவ துண்டோ மெய்த்தவர்க் கொழிந்து றுதோ
கடிநகர் நிலவு காட்டிற் காயுமே கருணை வாழ்வே.

58 கருங்குழல் நுதற்கட் பின்னற் கவின்கடைக் கபோலந் தாழ்ந்த
அருங்குழை கடந்த கண்ணின் அயிற்கடை அனங்க சாப
நெருங்குறத் தொடுத்த ஏவின் நிமிர்தலை யேய்க்கு மென்றால்
மருங்கில்பொற் றிருவே யாருன் மதர்விழி பரவ வல்லார்.

## திருச்செவிப் புகழ்ச்சி

59 தோகைநின் கபோலஞ் சார்ந்த துணைநிழற் சுவடுந் தோடும்
ஆகவிவ் வுருவை நான்கின் ஆனன இரதம் வாய்த்தோ
ஏகநன் புடவி வட்டத் திருசுட ராழித் திண்தேர்ப்
பாகரைப் பொருது மாரன் பழம்பகை தீரப் பெற்றான்.

60 வேரி நாள்ம லர்க்குள் வாணி விலையில் பாட லமுதெலாஞ்
சேர மாம டந்தை நின்செ விக்கு ஞஅ ருத்தவே
ஆர மாலை முடிய சைப்ப ஆடியெற்று குண்டலம்
பூரை பூரை யென்ற சொற்பொ லிந்த ஓசை பெற்றதே.

## திருநாசிப் புகழ்ச்சி

61 இமய மன்னன் மரபில் வெற்றி இடுப தாகை அணையளன்
அமலை யுன்றன் வதன துண்ட அணிசி றந்த மணியையோ
விமல மன்னு கவிஞர் முத்தை வெற்பில் வல்லி யலர்வதோர்
கமல மன்னு குமிழ ளித்தல் கண்ட தல்ல என்பதே.

## திருஇதழ் புகழ்ச்சி

62 இறைவி நின்னி தழ்ச்சி வப்பி யற்கை யித்தொ டிணைசொலல்
நிறைகொள் கொவ்வை யிந்நி றத்தின் நீழல் பெற்று விம்பமாய்
உறைதல் கொண்டு நாணு மற்றெர் உவமை யில்லை உண்டெனு
அறைக டல்து கிர்ப்ப ழுக்கின் அன்று சொல்வன் அளியனே.

## திருநகைப் புகழ்ச்சி

63 அன்பு முற்றிவடி வாய அம்மைநின தான னத்துமதி நகைநிலா
நன்பு றத்தமுத மொழுகு மாமதுர நறைகொள் சீதளம யின்றவாய்
இன்பு ளிப்பலது உவட்டு ருதினியெ னத்தெ விட்டியச கோரம்வான்
முன்ப ரப்புநில வுண்ணு மாலுனது மூர லுக்குநிகர் மூரலே.

## திருவாய்ப் புகழ்ச்சி

64 விள்ள நாவுரை எழுந்தொ றுந்தலைவர் வீரமும் புகழும் அழகுமே
தெள்ளு பாடல்மது ரம்ப ழுத்தனைய செய்ய கேழொளிவ னப்பினல்
அள்ளல் மாமலரை விட்டு வாணியுனது அருண நாவுறைய வெள்ளையாய்
உள்ள மேனியுமெ னம்மை நீயருள உன்நி றம்பெறுவ தொத்ததே.

65 அற்றையருட் சிவசேடஞ் சண்டனுண அதுபொரு தாவல் தீரக்
கற்றைமலர்க் குழலுமைநின் கருப்பூர சகலமதிச் சகலம் போல
உற்றதிருத் தம்பலத்தி னுருசகல மேனுமினி துண்டு வாழப்
பெற்றிலரேல் அமரரெனும் பெயர்பெறவும் இருந்தனரோ பிழைப்பில் விண்ணோர்.

66 பசுத்தமலர்க் கொடிகருணை பழுத்தனைய கொம்பேநின் பரமர் பொற்றோள்
விசைத்தொழிலைக் கலைவாணி தனிற்பாடிப் பாடியவண் மெலிவ தல்லால்
அசைத்திலர்பொன் முடியுனது மதுரமொழிக் கசைத்தனரென் றதற்கு நாணி
இசைத்தொழிலைக் கைவிட்டாள் எழில்வீணை உறையிலிட்டா ளேது செய்வாள்.

## திருச்சுபுகப் புகழ்ச்சி

67 மகவாசை யாலிமைய மலையரையன் மலர்க்கைதொட மனத்து ளன்பு
புகஆசை யாலிறைவன் கரத்தேந்தப் பொலிவுறுநின் சுபுகம் போற்றின்
முகவாசி அரன்படிமக் கலம்பார்க்க விட்டமுகிழ்க் காம்பு போலுஞ்
சகவாழ்வை இகழ்ந்திதயந் தனித்தவர்தந் தவக்கொழுந்து தழைத்த கொம்பே.

## திருக்கழுத்தின் புகழ்ச்சி

68 வயங்குறுநின் தரளவட மான்மதச்சே றளையமது மத்தர் மேனி
முயங்குதொறும் எழுபுளக முட்பொதிந்த பசுங்கழுத்து முகமுங் கண்டால்
இயங்குபுனற் கருஞ்சேற்றின் எழும்வலய முள்ளரைத்தா ளீன்ற கஞ்சம்
பயம்புகுதல் கடனன்றே மாற்றிலாப் பசுமையொளி பழுத்த பொன்னே.

69 செந்திருநின் திருமணத்திற் சேர்ந்தசர மூன்றநுழுதித் திகழ்வ தென்கோ
மந்தரமத் திமதார மூவகைநா தமுமெல்லை வகுத்த தென்கோ
கொந்திரையுந் துணர்பூகங் கொழுத்தபசுங் கழுத்தின்வரைக் குறிகள் மூன்றும்
இந்திரையுஞ் சயமகளுங் கலைமாதும் புகழ்வதல்லால் யானென் சொல்வேன்.

## திருத் தோள் புகழ்ச்சி

70 முன்னமொரு தலைசினவுன் முதல்வரால் இழந்த அயன் முகங்கள் நான்கால்
உன்னழகுக் கேற்றபசுங் கழைமணித்தோள் ஒருநான்கும் வழுத்து கின்ருன்
இன்னமொரு சீற்றமெழுந் தரிதலையை எனினுமிவள் தடமென் தோளைச்
சொன்னதலைக் கழிவிலையென் றதிற்றுணிந்த துணிவன்ருே சுருதி வாழ்வே.

## திருக் கைப் புகழ்ச்சி

71 திருமகள் தன் சீறடியால் துவண்டும் அதிற் செம்பஞ்சாற் செங்கேழ் பெற்றும்
மருமுளரி எழில்படைத்த திதுவோநம் இயற்கையெதிர் அலர்வதென்றே
இருகரமு நகைத்தநகை ஒளியையுனது எழிலுகிரென் றிறைஞ்சி நாளும்
அருமறைகள் வழுத்துகின்ற ததிசயமோ பேதைமையோ அன்போ அம்மே.

## திரு முலைப் புகழ்ச்சி

72 நித்தரொரு பக்கமயில் நிற்களிறுன் வட்டமுலை நிற்குமெழி லில்த னதுசீர்
மத்தகமெ னத்தனில யிர்த்தொருகரத்தைமுடி வைத்துறவு றத்த டவுமால்
முத்தமுலை செப்புவதெ னக்களிறு பிற்குமரன் முற்புதல்வர் துய்த்த அமுதால்
அத்தலைமை பெற்றனர் அதில்திவலை கிட்டினுமென் அற்பஉயிர் முத்தி
பெறுமே.

73 முக்கணிறை வர்க்குமயல் முற்றஎழின் முற்றும்முலை முட்டியரசு ரப்பொ முகுபால்
மக்களிரு வர்க்கருள அக்களிரும்இக்குகனும் மட்டிளமை முற்று கிலரால்
அக்கடலு தித்த அமு தத்தினையெ டுத்ததில டைத்திருகண் முத்தி ரையின் வாழ்
செக்கர்மணி மெய்க்கலச மத்தனையுன் வட்டமுலை செப்பலம லைப்பு தல்வியே.

74 கொற்ற வாரண முகம கன்பொரு குஞ்ச ரானன நிருதனுர்
இற்ற கோடு திர் ஆர மாலிகை இதழ்ம ணிப்ரபை தழையவே
பெற்ற பாகபி ஞக பாணிப்ர தாப மோடணை புகழெனு
உற்ற தாயினும் உனது பொற்றனம் உரைப டாநிறை செல்வியே.

75 தருண மங்கலை உனது சிந்தை தழைந்த பாலமு தூறினல்
அருண கொங்கையி லதுபெ ருங்கவி அலைநெ டுங்கட லாகுமே
வருண நன்குறு கவுணி யன்சிறு மதலை அம்புயல் பருகியே
பொருள் நயம்பெறு கவிதையென்ருெரு புனித மாரிபொ ழிந்ததே.

## திரு உரோமரேகைப் புகழ்ச்சி

76 மூல மேநின் மகிழ்நர் கோப முதுக னற்பொ ருதுவேள்
கோல நாபி மடுவி னிற்கு ளிப்ப வந்த வெம்மையான்
மேல வாவு தூம ரேகை வேறெ ழுங்கொ ழுந்தையோ
நீல ரோம ரேகை யென்று நீள்நி லங்கு றிப்பதே.

77 முளரி மாதுன் முலையி னேடு முலைநெ ருக்க இடையில்வான்
வெளியில் நீல மோடி யுந்தி வியன்மு ழைக்குள் நுழையவே
தெளியு நீரில் யமுனை நீவு சிறுத ரங்க மனையபே
ரொளியின் ஞால மருளு மீது ரோம ரேகை யென்னவே.

## திரு நாபிப் புகழ்ச்சி

78 தூய கங்கை நிலைப டைத்த சுழித னத்து முகையினுல்
ஆய துங்க ரோம வல்லி ஆல வாலம் விரகவேள்
தீய ரும்பும் ஓம குண்டம் இறைவர் செங்கணிடைவிடா
மேய கஞ்ச மடுவி னுந்தி வேறு ரைத்தென் விமலையே.

## திரு இடைப் புகழ்ச்சி

79 தரைம டந்தை பரவு மங்கை தனத டம்பொ ருதுநின்
திரும ருங்கு லறவ ளைந்து சிறுகி மூவி ரேகையாய்
வரைபி ளந்தொ ரிடிக ரைக்குள் வாழ்ம ரத்தொ டொத்ததால்
உரைக டந்து விடுமுன் மற்ரெ ருறுதி தேட நாடுமே.

80 வம்பைத் தொலைத்துதறி யிறுகிக் கனத்திளகி வருபுடை நெருக்கி வளர்மாக்
கும்பக் கடாக்களிற் றினையனைய உனதுமுலை கொடிதுகொடி தென்று வெருவா
அம்பொற் றனிக்கமல இறைபொரு திடையென அழுத்துபூ ணென முனிவரொடு
உம்பர்க்கு முளமருள ஒளிகெழுமி ரேகைமூன் றுலகமோ தெளிவ துமையே.

## திரு நிதம்பப் புகழ்ச்சி

81 கொத்துவிரி யலர்சோலை யிமயவெற் பரசன்மெய்க் குலமலைப் பக்க மெனவாழ்
அத்தனைவி ரிந்தவக லத்தொடுபெ ரும்பாரம் அடையவுன் றி தம்ப விடையே
எத்தனைபெ ரும்புவனம இற்ருலும் அழிவிலை இதற்கெனச் சேம நிதிபோல்
வைத்தது பரந்திடங் கொண்டுவகை யிடமற வருத்தவோ மதுர அமுதே.

## திருத் தொடை முழந்தாள்களின் புகழ்ச்சி

82 பொற்கதலி புறங்காட்டுங் குறங்கால் வேழப் புழைக்கைதடிந் துஞ்சிவனைப் பணிந்து தேய்ந்த
வற்கடின முழந்தாளிற் கும்பஞ் சாய்த்து மணிமருப்பைக் கனதனத்தால் வளைத்து மம்மே
நிற்கடின கோபமம ராமை கண்டோ நித்தரதன் தொக்குரித்த துடுத்த நேயம்
பிற்கருதி யிவளுறுப்போ டுவமை வீறு பெற்றதிது என்னுமிந்தப் பெருமை கண்டோ.

## திருக் கணைக்காற் புகழ்ச்சி

83 உம்பர்தொழுந் தொறுமகுடச் சாணைத் தீட்டி ஒளிருநக நுனைக்கணையோர் ஐந்தும் ஐந்துஞ்
செம்பொன்மணிக் கணைக்காலாம் இணைப்பொற் றூணி சேர்த்தன்ரே சிவன் பகைவேள் திருகின்ருன்
அம்பொருபத் தளித்தனையின் றன்று போல ஐங்கணைதொட் டழியினது பழு தென் றன்ரே
வம்பமருங் கனதனப்பொற் றிருவே உன்றன் மனவிரகின் செயலொருவர் மதிப்ப தன்றே.

## திருவடிப் புகழ்ச்சி

84 உளமகிழ் மகிழ்நர் சென்னி உறுநதி விளக்க மாயோன்
கிளர்முடிப் பதும ராகக் கேழொளி செம்பஞ் சேய்க்கும்
முளரிநின் பதங்கள் வேத முடியுறப் பதித்த தவ்வாறு
எளியஎன் தலைமேல் வைக்க இரங்குவ தென்று தாயே.

85 அரியமென் காவில் நீபுக்கு அசோகினிற் பாத மேற்ற
உரிய நம் பதத்தை யீதோ உறுமெனப் பொருது பெம்மான்
எரியுற மரத்தை நோக்கும் இயல்பினைக் கேட்டும் யானுன்
வரிமலர்ப் பாதம் போற்றும் வளமினி தினிது மரதே.

86 மறும டந்தையை மொழிய நின்பத மலர்வெ குண்டர னுதலிலோர்
முறைய றைந்திட விழியி னும்பட முதுப ழம்பகை கருதிவேள்
இறையை வென்றனன் விழியை வென்றனன் எனமு ழங்கிய குரலெனது
அறைசி லம்பெழும் அரவ மென்பதென் அருண மங்கல கமலையே.

87 இமநெ டுங்கிரி உலவி யுங்கவின் எழுநி ரந்தர மலருமேல்
அமர்பெ ருந்திரு அருளு நின்பத அருண முண்டக மனையதோர்
கமல மென்பது பனியில் வெந்திதழ் கரிய கங்குலின் முகுளமாய்
விமலை யின்திரு மனையெ னும்பெயர் விளைவ தொன்றல முதல்வியே.

88 பஞ்ச முத்தினும் வாடு நின்பத பங்க யத்தினை ஒப்பெனு
விஞ்சை கற்றவர் வன்பு றக்கம டத்தை வீணில் வியப்பராம்
அஞ்ச னப்புயல் தங்கை நின்வரர் அம்மி மீதிலும் வைப்பராம்
வஞ்ச கக்கொடு நெஞ்ச ரத்தனை வல்ல ரல்லர் நினைக்கினே.

89 அற்ற வர்க்கருள் செய்யு மம்மை நின், அற்பு தப்பத மம்பொன்நாடு
உற்ற வர்க்கருள் பொற்ற ருத்தர ஊட றிந்தில மென்னவே
முற்று பொற்பர மாதர் கைத்தல முண்ட கங்குவி வெண்நிலா
நற்றி றத்தொடு நாடி நாடிந கைக்க வாளுகி றென்பரே.

90 அன்பினர்இ ரப்பதின்இ ரட்டியருள் செய்யும் நின்பதத ருத்துணர்நி றைந்தொளிர்வ னப்பாம்
இன்பமுறு தேன்முழுகு மென்னிதய வண்டின் தன்புளக மெய்க்களி தழைக்கவருள் தாயே.

91 நாடியுன தற்புத நடைத்தொழில்ப டிக்கும் பேடைமட அன்னமொடு பேதநடை கூறும்
ஆடகம ணிப்பரிபு ரத்தரவம் அம்மே ஏடவிழ்ம லர்ப்பதமி ரைக்குமறை போலும்.

## நாடோறுந் தியானித்துப் பணியுமாறு.

92 மூவர்ம கேசன் முடிகொளு மஞ்சத் தொழிலாயும் மேவிய படிகத் தனதொளி வெளிசூழ் திரையாயும்
ஓவறு செங்கேழ் விம்பம தின்பத் துருவாயும் பாவைநி னகலா இறையொடு நின்னைப் பணிவாமே.

## பல அவயவங்களின்மேலும் எழுமுள்ளன்பு.

93 ஓதியிருள் மூரலொளி உற்றகுழை வாக மோதுமுலை யற்பஇடை முற்றுமுனி தம்பம்
ஆதிபர னின்னருள் திரண்டருண மாகு மாதுநின்ம லர்ப்பதம னத்தெழுதி வைத்தேன்.

## செல்வப்புகழ்ச்சி.

94 தூயமதி மரகதச்செப் பொளிர்கலையுங் களங்கமுநேர் சொல்லுங் காலைக்
காயுமதி தவளகருப் பூரசக லத்தொடுகத் தூரி போலும்
நீ அருந்த அருந்தவவை குறைதொறுமவ் வீரண்டும் அயன் நிறைத்தல்
போலும்
தேயுமது வளருமது திங்களொளி தோவுனது செல்வ மம்மே.

95 தேவியுன் இல்லஞ் சிவனுறை அந்தப் புரமானுல் யாவ ருனைக்கண் டெய்துவ
ரிமையோர் முதலானோர்
ஆவல்கொ டெய்த்துன் வாயிலில் அணிமா திகளாலே மேவிய சித்திப்
பேறுடு மீள்வா ராளுரே.

## கற்புப்புகழ்ச்சி

96 கலைமகளும் பொதுமடந்தை கமலையுமற் றவளே
மலைமகள் நீ கற்புடைய வனிதையெனப் பகருங்
குலமறைக ளெதிர்கொடுநின் குரவினையும் அனையா
முலைகுழையப் புணர்வதுநின் முதல்வரல தில்லையால்.

## சத்தி வடிவெல்லாந் தேவிவடிவு

97 வேதியர்க ளயன்நாவில் விஞ்சைமக ளென்றும்
சீதரன்றன் மணிமார்பிற் செழுங்கமலை யென்றும்
நாதரிடத் தரிவையென்று நாட்டுவரெண் ணடங்க
ஆதிபரன் மூலபரை யாமளையுன் மயக்கால்.

## பாதோதகத்தின் மஹிமை.

98 செய்ய பஞ்சுகு ழம்பெ ழும்புனல் செல்வி நின்பத நல்கவே
துய்ய பங்கய வாணி தம்பல ஊறல் துய்த்தசொல் வாணர்போல்
மையல் நெங்சுறு மூம ருங்கவி வாண ராகிம லிந்ததால்
மெய்ய டங்கலு மூழ்கு முன்கவி வீறு நாவில டங்குமோ.

## அடியார் பெறும் இறுமைப் பயன்கள்.

99 சுந்தரிநின் தொண்டர்தமைத் தோய்வதற்கு நாமகளும்
இந்திரையு மலரயன்மா விடருழப்ப இரதியின்கண்
அந்தமில்பே ரழகொடுகற் பழித்துநெடு நாள்கழியச்
சிந்தையுறு பாசம்போய்ச் சிவமயத்தைச் சேர்குவரால்.

## தன் வினயத்தை வெளியிடுதல்.

100 ஆதவனுக் கவன்கிரணத் தங்கியைக்கொண் டாலத்தி சுழற்ற லென்கோ
சீதமதிக் கவன்நிலவி னெழுகுசிலைப் புனல்கொடுப சரிப்ப தென்கோ
மோதியமைக் கடல்வேந்தை அவன்புனலால் முழுக்காட்டும் முறைமை
யென்கோ
நீதருசொற் கவிகொடுனைப் பாடியுனது அருள்பெறுமென் நீதி அம்மே.

உ



# ஸௌந்தர்ய லஹரீ

## செய்யுள்களின் ப்ரயோக முறைகளும், யந்த்ரங்களும் :

ஸ்ரீ ஆதிசங்கர பகவத்பாதர் உலகிற்கு அருளிய செல்வங்களில் ஸௌந்தர்ய லஹரீ எனும் மந்த்ரசாஸ்த்ர நுணுக்கங்களுடன் கூடிய தேவிக்கான பாமாலையிலுள்ள செய்யுள்கள் உலக மக்களின் துயரங்களை நீக்கும் மருந்தாகவும், மாந்தரின் மன அவாக்களை பூர்த்திசெய்வதாகவும் கண்ட ஆன்றோர் சிலர், அச்செய்யுள்களைப் பாரா யணம் செய்யும் முறை, ஒவ்வொரு செய்யுளுக்கும் உரிய யந்த்ரம், பூஜை முறை, அதனால் ஏற்புடும் பயன்கள் முதலியவற்றை ப்ரயோக நூல்களாக வடித்துள்ளனர். இத்தகைய நூல்கள் நம்நாட்டில் வங்கம், கேரளம், தமிழ்நாடு முதலிய பகுதிகளில் கிடைக்கப்பெறுகின்றன. அவைகளில் மேலானவையாகக் கருதப்படும் சிலவற்றின் ஸாரம் பின்வரும் பக்கங்களில் பிரசுரிக்கப்பட்டுள்ளது.

பரோடா நகரத்திலுள்ள அரசாங்கப் பொருட்காட்சிசாலையில் பல்லாண்டு களுக்கு முன்னர், ஸௌந்தர்ய லஹரீ ஏட்டுப்பிரதி யொன்றில், செய்யுட்களுடன், ஒவ்வொரு செய்யுளின் பொருளுக்கேற்ப தேவியின் சித்திரம் வரையப்பட்டுக் காண்கிறது. அடுத்து ஒவ்வொரு பக்கத்திலும், அவ்வப்பக்கத்தின் இடக்கைப்புறத்தில் அவ்வேட்டுப்பிரதியில் காணப்படும் ஒவ்வொரு செய்யுளுக்கான படமும், மையத்தில் செய்யுளின் எண் வரிசையும், வலக்கைப்பகுதியில் அச்செய்யுளுக்கான யந்த்ரமும் தரப்பட்டுள்ளன.

குறிப்பு :- இப்பகுயின்கண் தரப்பட்டுள்ள ப்ரயோகமுறையை தகுதியுள்ளோர் குருவின் ஆணைப்படி அல்லது சிறந்த தேவீ உபாஸகர்களிடம் கேட்டறிந்து கையாளும் படி வேண்டப்படுகிறது. சில ப்ரயோக முறைகளில் காணப்படும் சில மாறு பாடுகள் ஆங்காங்கு அடைப்புகளில் தரப்பட்டுள்ளன. குறிப்பிட்ட முறைகள் தினமும் செய்யுளைப் பாராயணம் செய்து, யந்திரத்திற்கு அன்றுடம் முறைப்படி பூஜை, நைவேத்யம் செய்து, முடியுமானல் யந்த்ரத்தை ரக்ஷையாக உபயோகிக்கலாம்.

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
|---|---|---|
| | 13 | क्लीं क्लीं क्लीं<br>साध्यम्<br>क्लीं क्लीं क्लीं |
| | 14 | श्रीं श्रीं<br>श्रीं श्रीं<br>श्रीं श्रीं |
| | 15 | सं सं<br>सं सं<br>सं सं |

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
|---|---|---|
| | 43 | श्रीं |
| | 44 | क्लीं |
| | 45 | सं<br>सं<br>सं |

| படம் | செய்யுள் எண் | யந்திரம் |
|---|---|---|
| | 46 | ह्रीं |
| | 47 | ह्रीं ह्रीं ह्रीं |
| | 48 | बु शु च / गु र कु / रा श के |

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
|---|---|---|
| | 55 | ग्लूं ग्लूं |
| | 56 | यं यं यं |
| | 57 | श्रीं श्रीं |

| படம் | செய்யுள் எண் | யந்திரம் |
|---|---|---|
| | 61 | ह्रीं |
| | 62 | मं मं मं |
| | 63 | ह्रीं |

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
|---|---|---|
|  | 64 |  |
|  | 65 |  |
|  | 66 |  |

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
| --- | --- | --- |
| | 67 | श्रीं श्रीं श्रीं |
| | 68 | ह्रीं |
| | 69 | क्षं मूं |

| படம் | செய்யுள் எண் | யந்த்ரம் |
|---|---|---|
|  | 70 |  |
|  | 71 |  |
|  | 72 |  |

திரிபுரத்தைச் சுட்டெரிக்கப் பரசிவனுர் அன்று
திங்களையும் மதியினையும் தேர்க்கால்கள் ஆக்கி
விரிபுவியை ரதமாக்கிப் போர்செய்து வென்றுர்
விமலனையே நானெதிர்க்கும் சிலைமதனன் தேரோ!
பரிவுடைய நின்முகமாய்த் திகழ்கின்ற தம்மா!
பாங்குடன்நின் தாடங்கம் கன்னமதில் மின்னத்
தரித்தமதன் தேரினுக்கு நாலுசக்ர மாகித்
தாயேநின் ஸ்ரீசக்ரம் திகழ்கின்ற தம்மா! 59

அமிர்தரஸம் போல்இனிக்கும் நினதுதிரு வாக்கின்
அற்புதமாம் நாதமதைச் செவியதனில் மாந்த
விமிதமொடு வாணியவள் வாய்திறவா திருந்து
வீணையினை மீட்டாமல் மெய்மறந்து நின்று
குமுதமொழி கேட்டவளும் தலையசைக்கும் போது
குழைக்காதின் குண்டலங்கள் ஜணஜணவென் றொலித்தே
அமிர்தமொழி தனக்கிசைந்தே எதிரொலிப்ப தொக்கும்
அன்னைநின் வாக்கினிமை யானுரைக்கப் போமோ! 60

இமவானின் குலக்கொடியே ஈஸ்வரியே நின்றன்
எழில்தவழும் நாசிகைதான் மூங்கிலைப்போல் இலகும்
கமகமக்கும் மென்காற்றை உள்வாங்கிக் கும்பிக்
கழற்றிவிடப் பிங்களைதான் முத்தொன்றை அள்ளி
அமைதியொடு வருகையினில் ஆங்கந்த முத்தும்
அன்னைநினைப் பிரியமன மின்றிவெளித் தங்கும்
சமிக்ஞையிது தான்அறிந்துன் மூக்குத்தி தானும்
தனித்திலங்கும் சத்தியத்தைத் தியானித்தேன் தாயே!61

முத்தொத்த பல்வரிசை மூடிநிற்கும் அதரம்
மேவிநிற்கும் எழிற்சிவப்பிற் கீடிணையும் ஏது?
கொத்துநற் பவளமெனும் கொடியதற்கோ புவியில்
கொஞ்சுகனி தானிருந்தால் உவமிக்கக் கூடும்
சுத்தவெண்மை யாகிநின்றன் தோட்டினிலே இலகும்
சூரியனின் சுடர்பட்டே கோவ்வைக்கனி சிவக்கும்
நத்தியதை உவமித்தால் நாணித்தலை கவிழ்ந்து
நழுவாமல் எப்படித்தான் தலைநிமிரும் அம்மா! 62

முழுமதியை நிகர்த்தநின் முகமதனில் பொங்கும்
முல்லையொத்த புன்னகையில் பிரவகிக்கும் அமுதம்
தழுதழுக்க மாந்துகின்ற சகோரங்கள் எல்லாம்
தனித்தினிக்கும் இன்சுவையால் திகட்டிடவும் அவைகள்
விழுமிநிற்கும் வேட்கையினுல் மேலுமதை மாந்த
வேறென்று மாற்றறிய வேண்டியங்கு வானில்
கழிவுநீர் புளிப்புடனே விண்வெளியில் தூவும்
கலைமதியின் கிரணமதை மாந்துகின்ற தம்மா! 63

எம்பெருமான் காமேசன் குண்நலனை யென்றும்
இடைவிடா துன்நாவும் ஜபிப்பதனுல் தாயே
செம்பருத்திப் பூவொத்துச் செபித்ததிரு நாவும்
செக்கரெனத் தான்சிவந்து திகழ்கின்ற தம்மா!
அம்மென்னும் ஒலிஉதவி நாவதனில் வதியும்
அழகுவெள்ளை ஸ்படிகமெனத் திகழும்கலை வாணி
தம்முடைய-நாவதனில் வதிவதனுல் தாயே
சரஸ்வதியும் செக்கரெனச் சிவந்தனளோ சொல்வாய்?64

அசுரரைவென் றழித்தஎழிற் குமரகந்த வேலன்
அன்னைநின் சன்னதிக்கு விரைந்துவரும் போது
விசும்பொத்த தலைஅணியைத் தன்கையி லேந்தி
மேலிருக்கும் கவசமுடன் விரைந்துவந்து தொழுவார்
பசுபதியை அருகணைக்கும் நின்அருளை வேண்டிப்
பாலன்வர மென்றதாம் பூலமதைத் தந்து
பசிதணித்து ஞானமருள் பார்வதிநின் குமரன்
பகவன்சண்டி கேசன்பால் பரிவுகொண்ட தென்னே? 65

வீணையினை மீட்டிகலை வாணிசிவன் மீதே
மெய்ப்புகழைப் பாடிவரக் கேட்டுமகிழ் வெய்தி
வாணியின் நற் கலைஞானம் வாழ்கவென வாழ்த்தும்
மதுரமொழி தனைக்கேட்டு வீணைகலை வாணி
நாணிவெட்கி வீணைதனைக் கட்டிவைத்து விட்டே
நாயகிநின் வாக்கமுதம் தான்பருக நிற்பாள்
வாணியவள் வீணைக்கும் மிஞ்சுகுரல் கொண்டாய்
மதுரமொழிக் கேதுஉவமை வைத்திடுவேன் தாயே! 66

மலையரசன் தவமகளே எழில்சேர்நின் முகவாய்
வருடிநின்று மலையரசன் வாஞ்சையினுல் மகிழ்வான்
தலைவியென உனையடைந்த ஆதிசிவன் நின்றன்
தளிர்அதர பானமதைத் தான்பருகும்போது
நிலைஉயரத் தன்விரலால் தொட்டுமுக வாயை
நிமிர்த்திடவே உயரும்நின் முகவாய்க்கிங் கிணையாய்
உலகத்தில் எதனையிங்கு உவமிப்பேன் அம்மா
உருப்பளிங்குப் பிடியென்றுல் உண்மையா யிடுமோ? 67

முப்புரத்தைச் சுட்டெரித்து வெற்றிகொண்ட ஈசன்
மெய்யன்பால் நின்கழுத்தை தன்கரத்தால் அணைத்து
எப்போதும் தழுவமயிர் கூச்செரிய முட்கள்
இருக்கின்ற தாமரையின் தண்டதனைப் போல
ஒப்பில்நின் முகமலரும் தாமரைத்தாட் கழுத்தும்
ஒளிவீசும் முத்தாரம் கார்அகில்ச்சந் தனமும்
செப்புமுகத் தாமரைக்குக் கொடியதுபோ லாக
திகழும் திருக்கழுத்தும் திருவெய்தித் திகழும். 68

தசியென்றும் மார்க்கமென்றும் திகழ்கதிக ளோடு
சேந்து ஐந்து ஸ்வரகமக மதுரஇசை பாடும்
வாசினியே ஷட்ஜ, மத்ய காந்தாரம் ஆகி
வளர்இசையின் பிறப்பிடமாய்த் தனித்தனியே நின்று
காசினியில் நின் கழுத்தில் மூன்று வரியாகிக்
கலக்காமல் பிரிந்ததுவோ காமேசன் நின்றன்
மாசில்லாக் கழுத்தினிலே மாங்கல்யத் தோடு
வரிமூன்று சரட்டினைத்தான் சூட்டினரோ அம்மா!69

அயன்சிரத்தை ஆதிசிவன் நகவிரலால் கிள்ளி
ஐந்திலொன்றைத் தரித்திடவும் சிவன் நகத்தைக் கண்டு
பயமிகுந்து பதுமமலர்த் தோன்றியவன் நின்றன்
பங்கயத்தின் தண்டினைப்போல் மென்மையுடன் துவளும்
இயல்புடைய ஏர்மிகுந்த கரத்தினையே எண்ணி
என்றும்தன் தலைநான்கும் நின் நான்கு கரமும்
நயமுறவே காக்குமென அபயம்தாய் என்றே
நான்முகத்தான் துதித்துத்தன் நாற்கரமும்
குவித்தான். 70

மலர்கின்ற தாமரையின் வனப்பெல்லாம் திரண்டு
வந்தாலும் நின் நகத்தின் செம்மைக்கீ டாமோ?
மலர்மகள்தன் பாதத்தில் மருத்தோன்றிப் பூசி
வைத்ததினால் தாமரையும் செந்நிறமாய் மாறும்
குலவுமெழில் நகச்சிவப்புக் காந்தியினுக் கொப்பக்
குவலயத்தில் எதனை நான் உவமிப்பேன் அம்மா
அலர்ந்தசெந் தாமரையை பரிகசிக்கும் நினது
அழகுநகச் சிவப்பென்னில் அதிசயமு மாமோ? 71

கந்தனுடன் கஜமுகனும் களிமுகத்தோ டுற்று
கடிதினிலே அருகில்வரக் கருணைப்பால் சுரக்க
மைந்தர்தமை அருகணைத்து வழியும்பா லூட்டும்
மாசக்தி ஞானப்பால் வழங்குகின்ற தாயே
சிந்தனையில் மூழ்கிவிட்ட கஜமுகன்தன் சிரத்துத்
திகழ்கும்பம் இரண்டுந்தாம் மருங்குவந்த தென்னச்
சந்தேகம் கொண்டவராய் கரமதனால் தடவிச்
சரிபார்க்கும் நின்நகில்எம் துயரமெலாம் போக்கும். 72

அமிர்தரஸம் நிறைந்தஇரு மாணிக்கக் கும்பம்
அழகினுக்கே அழகுசெய்ய இரத்தினங்கள் மின்ன
விமிதமொடு விண்ணுயர்ந்த இமவானின் கொடியாய்
விளங்குதிருத் தாயேநின் நகில்அமுத மாந்தும்
தமியர்கண நாதரையும் குமரனையும் என்றும்
தனயர்களாய்க் குமரர்களாய்த் தாய்நீயே கொண்டு
அமிர்தப் பாலூட்டுகின்றாய் அருளுடைய தாயே
ஐயமெதும் எமக்கில்லை அரன்குமா ரன்றோ? 73

அன்னைநின் நகிலிடையே அசைமுத்து மாலை
அடற்களிற்றின் மத்தகத்தே உதித்திட்ட முத்து
பின்னமிலாக் கற்பூர நிறத்தினிலே ஒளிரும்
பின்நின்றன் கொவ்வையிதழ் அதரநிழல் பட்டு
முன்பின்னும் பலசித்ர வண்ணமது காட்டி
முப்புரத்தை எரித்தவனின் கீர்த்தியினை ஒப்ப
தன்வண்ணச் சிகப்புடனே ஸதாசிவத்தின் வெளுப்புத்
தான்சேர்த்துக் கோத்தஎழிற் கொடியெனவே இலகும்.74

பனிமலையின் சுடர்க்கொடியே பார்வதிநின் இதயப்
பாற்கடலின் வடிகாலோ பளிங்கொத்த வாணி
நனிசிறக்க வாக்கருளி நானிலமே வாழ
நல்லதொரு சுரநதியாய் நின்நகிற்பா லானுள்
கனிவுடைய தாயேநின் நகிற்பாலை உண்ட
கவுணியனும் சிவஞானப் பெரும்புலமை யுற்று
தனியுறாநன் மணம்நிறைந்தே எவர்மனமும் கவரும்
தவக்கவிஞன் ஆகிவிட்டான் தாயேநின் அருளே! 75

காமேசன் சினத்தீதான் சூழ்ந்திடவும் மதனன்
கதியென்றே ஓடிவந்துன் உந்தியெனும் மடுவில்
வாமிசிவ காமினைக் காத் திடுவாய் அபயம்
வையகத்தின் தாயேநீ அபயமென வீழ்ந்தான்
காமனுடல் தகித்திடுதீப் புகைக்கொடியாய் ஓங்கி
கனகநகில் முகட்டருகே சென்றிடவும் அங்கே
பூமணக்கும் நின் நாபி ரோமபந்தி யென்னப்
பூவுலகம் வியந்திடவே அமைந்ததுவோ அம்மா. 76

சிவசக்தி நின்னிடையில் யமுனையின்மேல் லைபோல்
திகழ்ரோம பந்தியினைச் சீவன்முக்தர் அறிவார்
தவகும்ப மென்னுமிரு நகில்மலைகள் மோதத்
தான்நடுவில் இருக்கஅஞ்சி சிறுவெளியும் தயங்கி
நவவடிவாய் ரேகையென உடல்நடுவே பாய்ந்து
நாபியிலே போய்ஒளிந்து கொண்டதுவோ தாயே!
சிவசக்தி தாயேநின் பாலனும்நான் அலனோ
சிறுகுழந்தை அறியாதோ செய்தபிழை பொறுப்பாய். 77

இமயத்தின் திருமகளே நின்எழிலார் உந்தி
ஏரார்ந்த கங்கையுறு சுழலாத சுழலோ
ஆமையும்நகில் தாமரை முகைபடைத்த ரோம
ஆவளியாம் கொடிக்கிழங்கின் சிறுபாத்தி தானோ
குமைமதனன் ஒளிச்சுடரின் ஹோமகுண்ட மேயோ
குமரிரதி விளையாடும் எழில்மிகுந்த வீடோ
எமையாளும் சதாசிவன்தான் இமைக்காமல் நோக்கும்
இதயதப சித்தியதன் வடிகாலோ தாயே! 78

உத்தமியே மலைமகளே உனதிடையும் மெலிந்து
உயர்நகிலின் பாரமதைத் தாங்காமல் வளைந்து
சத்தமின்றி மெல்லமெல்ல ஒடிந்திடுமோ என்னச்
சந்தேகம் நான்அடையத் திகழ்கின்ற தம்மா!
வித்தகியே நதிக்கரையின் வீற்றிருக்கும் மரமும்
வேர்பறிக்க வீழ்ந்துவிட தவிப்பதனைப் போலப்
பத்தினியே காண்கின்றேன் நின்றன்இடை தானும்
பன்னெடிய காலமெலாம் வாழட்டும் என்பேன். 79

மாசக்தி மகேச்வரனின் மகிமையொடு கீர்த்தி
மனதினிலே நினைந்துமகிழ் வெய்திடவும் அம்மா
பாசமது பொங்கநின்றன் எழில்தவழும் மேனி
பருத்துவிம்ம வேர்வையெழ கஞ்சுகமும் அவிழ
மாசற்ற புடைகனத்து வியாபித்துத் தங்க
மன்னுமொளி திகழ்நகில்கள் கனத்தினைத்தாங் காது
வேசமுறும் நின்இடையைக் காத்திடவே மதனன்
வீக்கியவல் லிக்கொடியின் மும்மடிப்பும் தோன்றும். 80

மின்னுகின்ற பனிமுடியார் மலைவேந்தன் செல்வி
விரிந்துஅடியில் பரந்துயர்ந்த தன்இயல்பாம் தன்மைக்
கன்னியுனைப் பரமேசற் களித்திட்ட போது
கனகவெற்புப் பெருஇமவான் கொடுத்தஸ்ரீ தனமோ!
தன்னிகரில் பிற்பாகம் கனத்துடனே அகன்று
தனிக்கனமும் மிகபெற்றுத் தரையெல்லாம் மறைத்துப்
பொன்னிறபொற் பீடமெனப் புவியோர்கள் வாழ்த்தப்
பூதலமேல் கொலுவிருந்து அருள்பொழிவாய் தாயே! 81

பத்தினியே நாயகர்க்கு வேதவிதி மாறாப்
பணிவிடைகள் புரிந்துவரும் பார்வதியே தாயே
மத்தகத்து மதக்கரியின் துதிக்கையது வெட்க
வாழையது நாணிநிற்கப் பொன்னிறமாய்த் தோன்றும்
வித்தகிநின் தொடையழகும் நாயகனை வணங்கி
மிகக்கடின மாகிவிட்ட வட்டமுழந் தாளும்
கத்துமை ராவதத்தின் மத்தகங்கள் தம்மைக்
கண்நொடியில் வெல்வலிமை பெற்றிலகு மன்றே. 82

வரையரசின் தவமகளே நினதுகணுக் கால்கள்
மயல்மதனன் அம்பறாத் தூணியது வாகித்
தரையதனில் சிவன்மீது போர்தொடுத்த அன்று
தன்சரங்கள் ஐந்துடநின் தாள்விரல்கள் பத்தும்
நிரைப் படுத்தி வைத்தனனே தேவாதி தேவர்
நின்முன்னே சிரம்தாழ்த்திக் கிரீடங்கள் பட்டு
விரவிடவே கூராகித் தொடுசரங்கள் போல
விரல்களெலாம் விளங்குவதைக் காண்கின்றேன்
அம்மா! 83

வேதங்கள் தம்முடனே உபநிடத மெல்லாம்
மெய்யாய்நின் பாதமலர் தன்னைமகிழ்ந் தணியும்
நாதன்முடி மீதிருக்கும் கங்கையதன் பெருக்கு
நற்பாதம் சுத்திசெய்த சுத்தநல் நீர்ப் பெருக்கோ
மாதவனின் கௌஸ்துபமும் நினதுதிருத் தாளின்
மருதாணி நிறமாக விளங்குவதால் தாயே!
ஆதிசக்தி நினைப்புகழ்ந்து நின்பதங்கள் போற்றும்
அடியனின் முடியினில்நின் அடிசூட்டு வாயே! 84

கண்களுக்கே ஆனந்தம் காந்தியொளி வீசக்
கசிந்தமரு தாணிரஸம் பாதமதில் துஞ்ச
மண்ணுலகில் தொலைவிருந்து நின்றன்திருப் பாதம்
மனதாலே வந்தித்து வணங்குகிறோம் தாயே
விண்வனத்தில் அசோகதரு பெண்பாதம் பட்டு
விதவிதமாய்ப் புஷ்பிக்கத் தவம்கிடப்ப தேனோ
தண்ணியதாம் நின்பாதந் தனையன்றி மற்றோர்
தருவினையும் தீண்டஅரன் சகிக்கமன மிலையோ. 85

பொய்யாகப் பிறிதொருத்தி மேல்பிரியம் போலப்
புனைந்தவள்பேர் கூறிநினை அரன்அழைக்க நீயும்
மெய்யாகப் பிணங்கிடவும் மேல்வருவ தறியான்
மெல்லடிகள் தான்பற்றிஊடி விளையாடும்
தையல்நின் மெல்லடிகள் நெற்றிக்கண் என்ற
தனைஎரித்த கண்ணுக்காம் தண்டனையைக் கண்டு
மெய்யில்லா மன்மதனுன் கால்சலங்கை தன்னை
மிகவிரைவாய் ஆட்டுவித்து வெற்றியொலி செய்வான். 86

பேரிமய வெற்பினிலே வீற்றிருக்கும் நின்றன்
பெருமைமிகு பொன்னடிகள் இரவுபகல் மலர்ந்து
சீரிலங்கப் பத்தியொடு பூசனைசெய் வோர்க்குத்
திகழ்ச்செல்வம் தருகின்ற திருவுடனே மேவும்
பாரிதனில் திருமகள்தான் பகலுறுதா மரையும்
பனிவாட்டக் கருகிவிடும் இரவினிலே துஞ்சும்
ஏரிகுளத் தாமரையை விஞ்சுபுகழ் கொண்ட
இணையடிகள் சிவப்பதிலே வியப்பேது முண்டோ? 87

புகழுக்கே இருப்பிடமாய் புன்மைகளே தீண்டாப்
பொற்பாத கமலஅடி பீடமது தன்னை
மிகக்கடின ஆமையதன் முதுகோட்டுக் கிணையாய்
வித்தகர்கள் உவமிப்ப தெவ்வாறோ அறியேன்
தகவுடைய சிவபெருமான் தன்மணத்தின் போது
தளிர்பாதம் இரண்டினையும் தன்கரத்தால் பற்றி
அகமதனைக் கல்லாக்கி அம்மியதன் மீதே
அடிப்பாதம் தனைவைத்த ததிசயமே யாதோ? 88

கற்பகமாம் தருவினையே அண்டி வாழ்வோர்க்குத்
கைகொடுத்தே உதவிசெயும் பான்மையது போலே
அற்பமெனும் மானிடர்க்கும் அளவிடற்கொண்ணாத
ஐஸ்வரியம் கீர்த்தியெலாம் அவனியிலே மகிழ்ந்து
சொற்படுமுன் தருகின்ற நின்பாதம் பற்றி
சுமங்கலிகள் மிகவிரும்பி நாடோறும் தொழுவர்
பொற்புமிகும் அம்மகளிர் தாமரைக்கை குவிய
பொன்னிலவார் மதியென நின் கால்நகங்கள் பொலியும்.89

தரித்திரரின் இச்சைதனை அறிந்துமகிழ் வடைந்து
தளராது வழங்குசெல்வம் தருகின்ற தருவின்
வரிசைநிறை மலர்ரஸமே பெருக்கெடுத்தே யோட
வழங்கும்கற்ப தருவினுடைப் பூங்கொத்துப் போலத்
தரிசிக்கும் அடியவர்க்கே அருள்பொழியும் நின்றன்
தளிர்ப்பாத ரஸமருந்த தவிக்குமொரு வண்டாய்
விரிமனமும் ஐம்புலனும் அறுகாலாய்க் கொண்டு
வீற்றிருக்கும் என்ஜீவன் விளங்கட்டும் தாயே. 90

அன்னநடைக் கன்னியென மென்மைநடை மாதர்
அழகுநடை கவிகளிலே சித்தரிப்பார் கவிஞர்
நின்நடையைக் கண்டுவெட்கிக் காலமென்னும் அன்னம்
நினையண்டி நடைபயிலத் தடுமாறி முயலும்
அன்னைநின் அரவிந்த பாதமுறு அணியில்
அழகுசெயும் இரத்தினங்கள் பாதஸர சப்தம்
தன்னொலியால் அன்னமவை பயிலுவதற் கேற்பச்
சப்தித்துக் கற்பிக்கும் அற்புதமஃ தன்றோ? 91

அரிஅயனும் திருமாலும் உருத்திரனும் நின்றன்
ஆசனமாய்க் கட்டிற்கால் ஆகித் திகழ்வார்கள்
பரிவுடைய ஸதாசிவனுர் வெண்நிறத்தைப் போர்த்தி
பளபளக்கும் பரிவுடைய வண்ணமதாய் ஆகி
வரிசிகப்பாய்த் திகழும்நின் மேனிஒளி பாய
வளர்சிவப்பாய் சிங்கா ரஸம் மிகுந்து துள்ள
சரிநிகராய் நின்றனக்கே ஆனந்தம் ஊட்டச்
சதாசிவனும் வீற்றிருக்கும் கோலமதும் என்னே?92

மனவாக்கிற் கெட்டாத கருணையுடை சிவத்தின்
மாகிருபை செந்நிறமாய் கருங்குழல்தான் சுருள
கனகநகை புன்சிரிப்பு இயற்கையெழில் தவழ
காலடைந்த மேலவர்க்கு க்ஷேமமெல்லாம் நல்க
தனதுமனம் வாகையதின் மென்மலரை வெல்லத்
தனமிரண்டும் மாணிக்கக் கல்லெனவே துலங்க
நினதிடையில் மெலிவாகி மார்பகத்தும் உற்ற
நிதம்பத்தும் பருத்தகன்று நிற்கின்ற தம்மா! 93

மரகதத்தால் ஆனதொரு பாத்திரம்போல் இலகும்
மதிமண்டலத்தில்அயன் ஒருபக்ஷமாக
விரவுகின்ற மதியொளியைப் பன்னீராய்க் கொண்டு
மேவுகஸ் தூரி,பச்சை கற்புரங்களோடு
பரவுநீரா டுதற்குஅயனும் அயராது சேர்க்க
பார்வதிநீ நீராடி வருவதனால் தாயே
தரணியிலே தேய்பிறையும் வளர்பிறையு மாக
சந்திரவொளி கூடுவதும் குறைவதுமாய் நிகழும். 94

ஐம்புலனை வசப்படுத்தி சித்தமிசை நின்ற
அடங்காத புலைக்காமம் அடக்கி புவிமீதே
நம்பியுன்றன் பாதார விந்தமலர் தொழுவார்
நற்கதியும் பெற்றிடுவார் மற்றவருக் கரிதே
செம்மாந்த இந்திராதி தேவர்க்கும் நினது
திருவாசல் தனில்த்வார பாலகிகளாகி
அம்மைநினைத் தொழுவதற்கே, அணிமா சித்தி
அடையதவம் கிடக்கின்றார் ஆதிசக்தி தாயே. 95

கவிவாணர் வசப்பட்டு வாணிஇருந் திடுவாள்
கனிவுடனே வாக்கருளும் பணிபுரிந்து திற்பாள்
புவியதனில் பலர்உழைப்புக் கண்டுதிரு மகளும்
பொன்னாகிப் பொருளாகிக் குற்றேவல் புரிவாள்
தவிசிருக்கும் தாயே!நின் அடியார்கள் எல்லாம்
தாயாக நினைப்போற்றித் தலைவணங்கு கின்றார்
குவிநகில்கள் புளகமுற சதாசிவனை யன்றி
குராமரமும் தீண்டாத கற்புடையாள் நீயே. 96

சதாசிவனின் திருத்துணைவி தாயே பராசக்தி
சரஸ்வதியாய் லட்சுமியாய்ப் பார்வதியாய் ஆகி
நிதானத்து நான்காகி மனம்வாக்குக் கெட்டா
நித்தியமாய்ச் சத்தியமாய் மகாமாயை ஆகி
விதானத்து வித்யாதத்வம் மேவுகின்ற சக்தி
வியன்நிலமே வியப்படைய வீற்றிருப்பாய் ஜோதி
சிதாகாசம் உணர்மறையோர் ஆகமநூல் வல்லோர்
தேவியுனை நன்குணர்ந்து தொழுதுவழி படுவார்.97

தாயே மருதாணிரஸம் தான்திகழும் நின்றன்
தளிர்புரையும் பொற்பாதம் தான்கழுவும் நீரை
வாயால்நான் பருகிநின தருட்கல்வி வேட்டு
வளருகின்ற மாணவனும் விளங்குவதும் என்றோ?
வாய்பேசா ஊமையும்நின் திருப்பாத நீரால்
வையகத்துப் பெருங்கவியாய் விளங்குவதும் கண்டோம்
நாயேன்வாய் சிவப்பேறி வாணியின்வாய் மென்ற
நலம்மிகுந்த தாம்பூலச் சாரும்நாள் யாதோ? 98

சிவசக்தி நின்பாத மலரேத்து மடியார்
திருமகளும் கலைமகளும் ரதிதேவி யோடும்
நவநவமாய்க் குலவிடுவார், அயனுநெடு மாலும்
நின்நல் லடியார்மேல், பொருமைமிகத் கொள்வார்
அவித்தையது அற்றுவிழ ஜீவன்விடு பட்ட
ஆனந்தப் பெருஞானத் திருவருளைப் பெறுவார்
புவியீதனில் "ஸதா" எனுநின் கலைநுட்பம் ஓர்ந்து
பூசனைகள் செய்வார்நின் பொன்னடியே சார்வார்.99

செஞ்சுடருக் கொருசுடரால் நீராஜனம் செயல்போல்
திகழ்சந்த்ர காந்தக்கல் உருகிவரும் நீரால்
அஞ்சலித்துச் சந்திரனுக் கருக்கியமே விடல்போல்
ஆழிக்கே அதனீரால் அர்ப்பணம்செய் திடல்போல்
தஞ்சமென்று நின்பாதம் போற்றிதுதி செய்ய
தாயேநீ தந்திட்ட வாக்குகளால் நின்னை
அஞ்சலித்தேன் சொற்கெல்லாம் தாயான சக்தி
அருள்கொண்டிங் கடியேனை ஆட்கொள்வா யம்மா! 100

ஓம்



காசீ க்ஷேத்ரத்திலுள்ள,
ஸ்ரீஅன்னபூர்ணாதேவீ

Sri Annapurani
at Varanasi

